

நீளா துங்கஸ்தநகிரி தடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்த்யம் ஸ்வம் ச்ருதிசதசிரஸ்ஸித்தமத்யா பயந்தி
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:

*பட்டர்.*

*நீளாதேவியின் அம்சமான நப்பின்னைப் பிராட்டியின் திருமார்பிலே கண்வளர்ந்தருளுகிறவனும், தன்னால் (கோதையால்) சூடிக் களையப்பட்ட மாலையிலே கட்டப்பெற்றவனுமாகிய கிருஷ்ணனை எழுப்பி, பற்பல வேதங்களின் தலையான பாகங்களாகிய உபநிஷத்துக்களிலே ஸித்தமான (வேதாந்த ஸித்தமான) தனது பாரதந்திரியத்தை அறிவிக்கின்றவளாய், எந்தக் கோதை வலிய அனுபவிக்கின்றாளோ, அப்பேர்ப்பட்ட பெருமைவாய்ந்த கோதையின் பொருட்டு இந்த நமஸ்காரம் கால தத்துவம் உள்ளவரை ஆகட்டும்.*

டிசம்பர், 1986

# ஸப்தகிரி

இதழ் 7 மலர் 17

உள்ளுறை

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

பக்கம்



அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ ஆண்டாள்
— சித்திரம் கே. ஜெகதீஷ்.

2-வது : கஜவாகனத்தில் ஸ்ரீபத்மாவதித் தாயார்—
திருச்சானூர் பிரம்மோற்சவம்.

3-வது : ஹம்ஸ வாகனத்தில் ஸ்ரீ பத்மாவதித் தாயார்.
திருச்சானூர் பிரம்மோற்சவம்.

பின்னட்டையில் : ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் திருக்கோயில்.

புகைப்படம் : திரு. வி. முத்துராமன். கோவை.

சிறப்பாசிரியர் :
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர் :
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

இப்பூவுலகில் ஒவ்வொரு உழைக்கும் மனிதனுக்கும் ஒவ்வொரு நாளும் — அவை அவனுடைய வயிற்றுப் பிரச்சனையைத் தீர்க்கும் காலமாக அமைவதால் — வாழ்வின் பொன்னான நாட்களாக அமைகின்றது. இன்றைய உழைப்புக்கு அவனுக்கு ஊதியம் கிடைக்காவிட்டால், நாளைய உழைப்பில் அவனுக்கு நம்பிக்கை ஏற்படாது. இப்போக்குக் காலப் போக்கில் அவனுக்கும், அவனைச் சார்ந்தாருக்கும் வீழ்ச்சியைத்தான் தரும். இத்தகு சோர்ந்து நிற்கும் மனிதனைத் தூக்கி நிறுத்தி வைப்பன, அவரவர்களுடைய சமயங்களேயாம். இந்த சமயங்களின் பெருமை, எந்த அளவுக்கு தனி மனிதனுக்கு வாழ்வில் நம்பிக்கையூட்டுகின்றன என்ற கேள்வியில்தான் அமைந்துள்ளது. சமயங்களின் சிறப்பு அவை கொண்டுள்ள உருவமைதிகளிலோ, வழிபாட்டுச் சடங்கு முறைகளிலோ ஆதாரப்படவில்லை. ஏனெனின் அவை மாறக் கூடியன;மறக்கக் கூடியனவாகவும் அமையலாம்.ஆனால் அவை கூறும் இறைமைத் தத்துவ விளக்கங்களே அச்சமயங்களின் மேன்மையைப் படம் பிடித்துக் காட்டும். தத்துவங்கள் மாறக்கூடியன அல்ல. இன்றைய தத்துவ உண்மையே நாளைய புதிய தத்துவத்திற்கு அடிக்கல். மானிடம் மாண்புறும் வகையில், வாழ்க்கை உண்மைகளை இறைமைப் பண்புக்கூறுகளை விளக்கிக் கூறுவதில் மற்றைய சமயங்களைவிட இந்து சமயத்திற்கு என்றுமே ஒரு தனியிடம் உண்டு. வழிபடுதற்கு இடம் அமைத்து, நாள் குறித்து, நேரம் பார்த்து வளர்ந்தது அல்ல இந்து சமயம். மண்ணையும், அதில் விளையும் புல்லையும், அதைத் தின்னும் பசுவையும், அதனைக் கொல்லும் புலியையும், அதனை வேட்டையாடும் மனிதனையும் வழிபட வைத்து, இறைவன் எங்கும், எப்போதும் எதிலும் உள்ளான் என்பதைக் கூறி, அன்பு ஒன்றினால்தான் இப்பூமி அமைதியைக் காண முடியும், தொண்டினால்தான் மனிதன் மாண்புறுவான் எனும் உயர்க் கொள்கைகளை விளக்கியது இந்து மதம். முயற்சி நம்முடையது, அதன் பலன் அவனிடம் உள்ளது என்று கூறி, வாழ்க்கையில் நம்பிக்கையூட்டி வருவது, நமது சனாதன தர்மமாகும்.

இத்தகு பெருமைமிகு இந்து சமயம் காட்டும் வாழ்க்கை உண்மைகளை விளக்கிக் கூற வந்தவையே சமய இலக்கியங்கள். இவற்றுள் வேதங்களும், உபநிஷத்துக்களும் சாதாரண மனிதனுக்குவிட, ஆன்ம அறிவு, இறைமை உணர்வு பெற்ற ஞானியர்க்கே உதவுவனவாக அமைந்தன. அவை கூறும் உண்மைகளைச் சற்றே எளிதாக்கி வடித்துத் தந்தன புராணங்களும், இதிஹாஸங்களும். இவைகூட, கற்றோர் உதவியுடன் மட்டுமே அனுபவிக்கத் தக்கனவாக இருந்தன. பின்னர் தாம் கற்றதையும் கற்பித்ததையும் உணர்ந்து அதன் வழியில் தம் இறை அனுபவங்களை நாயன்மார்களும், ஆழ்வார்களும், தாஸர்களும் தம் பாடல்களில் அள்ளித் தந்தனர். ஆனால் இப்பாடல்களில் தங்கள் பிறவிகளைப் புனிதமாக்கிக் கொள்ளும் ஒரு தீரா வேட்கையைத்தான் காண முடிகின்றது. இன்னும் கூறப்போனால், அவ்இறைவன் மீது தீராக் காதல் கொண்டு,அவன் பெருமையைப் பருக விரும்பிய சாமான்யர்களிடையே ஒரு சிறு குழப்பத்தையே அவை ஏற்படுத்தின எனவும் கூறலாம். இவர்களிலிருந்து ஒரு மாறுபட்ட கோணத்தில் அவர்களிடையே ஒரு புத்தம் புது மலராக, சுடர் விளக்காக தோன்றியவள் நம் மனதை ஆட்கொண்ட ஆண்டாள். தன்னல இறை வேட்கையினின்று சற்றே விலகிய பாதையில் பொதுநல நோக்கிலே தம் பாடல்களில் தனித்து ஒளிர்பவள் அந்த வில்லிபுத்தூர் நாயகி.

சமயத்தின் சிறப்பால் சமய இலக்கியங்கள் பெருமை பெற்றதைப் பார்த்திருக்கலாம். ஆனால் பரமனின் உள்ளத்தை, அவன் உணர்வினை-வேதம் சொன்ன ரகசியங்களை எளிய மொழியில் தெளிந்த நீரோடை போன்று தம் பாடல்களில் அள்ளித் தெளித்து, தன் இலக்கியத்தால் சமயத்திற்குச் சீர்மை அளித்தவள் நம் பாவையார். அவர்தம் அருளிய திருப்பாடல்களிலே, திருமொழியைவிட பாவைப்பாக்கள் நம்மை பெரிதும் ஈர்க்கின்றன. தத்துவச் சிறப்பும், சொல்லாட்சி அழகும், கருத்துச் செறிவும், பக்திப் பெருக்கும், இசைப் பெருமையினையும் கொண்டு விளங்கும் திருப்பாவை, கண்ணனாலும், மக்கள் அனைவராலும் போற்றப்பட்ட மார்கழி மாதத்தில் மக்கள் செவிகளில் உலா வருவது ஒரு தனிச் சிறப்பாகும். மாதம் முழுவதும் விழாக்கோலம் பூண்டு, தேவர்களின் பிரம்ம முகூர்த்தமான இம்மார்கழி மாதம் சைவர்க்கும் ஜைனருக்கும்கூட உகந்தது. இத்தகு பெருமை மிகு இம்மாதத்தில் திருப்பாவை பவனி வருவது அதன் பெருமையை மேலும் மெருகூட்டுகின்றது. பூமிப் பிராட்டியின் அம்சமாக, தன் நிலையிலேயே திகழ்ந்து, ஜீவகோஸ்வாமிக்கும், சைதன்யருக்கும், ஜெய தேவருக்கும் முன்னோடியாக இருந்து, தம் பாவைப்பாக்களில் பொது நலப்பண்புகளைத் தெளித்து, இவ்வையகம் வாழ, இன, இட பேதம் காட்டாது, பரமாத்மா, ஜீவாத்மா, சரணாகதி, கைங்கர்யம், மோட்ச இன்பம் ஆகிய வைணவத்தின் உயிர் நாடியான அர்த்த பஞ்சகத்தை விளக்கி, இறையடியார்களுள் இறவாப் புகழ் பெற்றவள் நமது கோதையார். வேதமும், புராணங்களும் போற்றும் நாம சங்கீர்த்தனத்தின் பெருமையினையும், சிறப்பினையும் தம் பாக்களில் நிலை நிறுத்தி, நமக்கு உயர்கதி காட்டியவள் அந்த பிஞ்சிலே பழுத்தவள்.

சமயத்திற்கும், சமுதாயத்திற்கும், மொழிக்கும் தன் பக்தியால், ஞானத்தால், பொதுநலப் பண்பால், தீந்தமிழ் வேட்கையால் ஏற்றம் தரும் வகையில் பாக்களைப் புனைந்து, பெண்ணிற்குப் பெருமை சேர்த்த அந்த வேதத்தின் வித்தினை இம்மார்கழி மாதத்தில் அவள்வழிநின்று பணிந்தேத்துவோமாக!

# செய்திச் சுருக்கம்

நிதி உதவி :

அண்மைக் காலமாக ஆந்திர மாநிலம் எதிர்கொண்டிருக்கும் வறட்சி மீட்பு பணிக்காக ரூ. 50 இலட்சத்தினை தி. தி. தேவஸ்தானம் ஆந்திர மாநில 'முதலமைச்சர் நிதி'க்கென வழங்கியுள்ளது.

'இலவச நுழைவு' ஒழிப்பு :

அண்மையில் கூடிய புதிய தி.தி.தே. பொறுப்பாண்மைக் குழு முடிவின்படி, இனிமேற்கொண்டு, திருமலையில் ஏழுமலையானைத் தரிசிக்க முக்யமானவர்களுக்கும் தேவஸ்தான ஊழியர்களுக்கும் இதுவரை சலுகையின் அடிப்படையில் கொடுக்கப்பட்டு வந்திருந்த 'சிறப்பு நுழைவு' அனுமதி உடனடியாக நிறுத்தப்பட்டுள்ளது.

மற்றைய செய்திகள் :

தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் மற்றும் அவர்களுடைய குடும்ப நபர்களின் உடல்நல சிகிச்சைக்கான வசதிகள் திருப்பதியில் இல்லாது போயின், அவர்கள் சென்னை அரசு மருத்துவமனை அல்லது வேலூர் சி. எம். சி. மருத்துவமனையில் சிகிச்சை மேற்கொள்ள அனுமதி தர வேண்டி தி.தி.தே., ஆந்திர அரசினை அணுகியுள்ளது.

திருமலைக் கோயிலின் முக்கிய பிரஸாதமான லட்டுகளை 5 மற்றும் 3 எண்ணிக்கைகளைக் கொண்ட பொட்டலங்களாக விற்கும் வகையில் அவற்றிற்கான தி. தி. தே. சின்னம் கொண்ட பாலதீன் பைகளை வாங்குதற்கென ஒவ்வொரு ஆண்டும் ரூ. 10 இலட்சம் ஒதுக்க மேலாண்மை முடிவு செய்துள்ளது.



அண்மையில் நேபாள நாட்டு மன்னர் மாண்புமிகு பீரேந்த்ரா அவர்கள் தம் துணைவியார் ராணி ஐஸ்வர்யா அவர்களுடன் திருமலைக்கு வருகை புரிந்தார்.

### வருந்துகிறோம்

தெலுங்கு இலக்கியக் கவிஞரும், அறிஞருமான டாக்டர். திவாகர்ல வேங்கடாவதானி அவர்கள் தமது 73 வது வயதில் பம்பாயில் காலமானார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கின்றோம். ஆந்திர மாநில கல்லூரிகள் சிலவற்றில் விரிவுரையாளராகவும், உஸ்மானியா பல்கலைக் கழகத்தில் சுமார் 20 ஆண்டுகளாக தெலுங்குப் பேராசிரியராகவும் பணிபுரிந்து ஓய்வு பெற்ற அவர், தமது நூலுக்கு 'ஸாகித்ய விருது' பெற்றவர். மத்திய மற்றும் மாநில ஸாகித்ய அகடாமியின் உறுப்பினராகவும் பணிபுரிந்தார். தி. தி. தேவஸ்தானத்தாரின் பக்தி நூல்களுக்கான நிதி உதவி திட்டத்தின் "வல்லுனர்க் குழுவின்" முக்கிய உறுப்பினராகவும் விளங்கினார். மேலும் தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் "நன்னய்யா பாரதம்" மற்றும் 'யஜுர் வேதம்' ஆகியவற்றை தெலுங்கில் மொழி பெயர்க்கும் பணியினையும் மேற்கொண்டிருந்தார். அன்னாரைப் பிரிந்து வருந்தும் அவருடைய குடும்பத்தாருக்கும், தெலுங்கு மொழி அறிஞர் பெரு மக்களுக்கும் எங்களுடைய ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

---

ஐயா,

நான் ஸப்தகிரி இதழில் வெளியாகும் கட்டுரைகளைத் தவறாமல் படித்து வருகிறேன். அதில் சமீபத்தில் பூம்புகார் சீனிவாசன் பி.எஸ்ஸி. என்பவரின் கட்டுரைகள் அடிக்கடி வெளியாகி அவைகளையும் வாசித்தேன். உதாரணமாக பிராணாயாமம் பற்றி ஆகஸ்ட் 86 இதழில் வெளியான கட்டுரையைக் கூட சொல்லலாம்.

அவரது கட்டுரைகள் பலவிதமா[ன] புத்தகங்களில் இருந்து எடுக்கப்பட்[ட] அப்பட்டமான காப்பிகளாக இரு[ப்] பது வருந்துதற்குரிய விஷயம். இந்[து] மதம் சம்பந்தமான கதைகளும், விஷயங்களும் எல்லோருக்கும் பொது வானவை.

ஆனால் அவைகளை சம்பந்தப்பட்[ட] எழுத்தாளர்கள் தங்கள் நடைகளி[ல்] எழுத வேண்டும். வேறு புத்தக[ங்] களில் இருந்து எழுத்துக்கு எழுத்[து] காப்பி அடிக்க கூடாது. நிறை[ய] புத்தகங்களை படிப்பதின் மூலம் ந[ம்] கட்டுரைக்கு பிளாட் வேண்டுமான[ால்] அதில் இருந்து எடுக்கலாம். துணுக்[கு] (சிறு குறிப்புகள்) பற்றிய விஷய[த்] தில் மற்ற பத்திரிகைகளில் இருந்[து] எடுத்து போட்டு, நன்றி... (பத்தி[ரி] கையின் பெயர்) என்று எழுதலா[ம்]. ஆனால் கட்டுரைகளுக்கு அது ம[ர]பல்ல. சம்பந்தப்பட்ட எழுத்தாள[ர்] வெளியிட்டாளர் அனுமதி பெற்[று] அவர்கள் படைப்பை பத்திரிகைக்[கு] அனுப்ப வேண்டும். அதுவே எழுத்[தா] ளர் தர்மம். அதனால் இனி தி[ரு] சீனிவாசன் போன்ற எழுத்தாள[ர்] கள் படைப்பு குறித்து இனிக் கவ[ன] மாக இருக்கும்படி வேண்டிக்கொ[ள்] கிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
என். கிருஷ்ணன்-திருச்சி.



# ஆண்டாளும் திருவேங்கடமுடையானும்

இந்த உலகில் ஞான பக்தி வைராக்கியங்களுடன் திகழ்ந்து முக்தியடைந்த பெரியோர்கள் பலர். இவர்களுள் உயர்நிலையில் நின்று புகழ் பெற்றவர்கள் இருடிகளும் ஆழ்வார்களும் என்று பெரியோர்கள் பணிப்பர். இவர்களுள்ளும் இறையன்பில் ஒருவரோடொருவரிடையே ஏற்றத் தாழ்வு உண்டு என்ற பெற்றியை உரை மன்னன் பெரியவாச்சான்பிள்ளை எடுத்துக் காட்டி மிகத் தெளிவாக விளக்குவர். (திருப்பாவை வியாக்கியானம்-மூவாயிரப்படி (அவதாரிகை) காண்க.)

இருடிகளையும் ஆழ்வார்களையும் ஒப்ப நோக்கினால் இருடிகளின் பக்தி அணுவளவாகவும் ஆழ்வார்களின் பக்தி மலையளவிலும் காணப்பெறும். அங்ஙனமே மற்றைய ஆழ்வார்களின் பக்தியும் பெரியாழ்வார்களின் பக்தியும். மற்றையோர் பக்தி

பேராசிரியர் டாக்டர். ந. சுப்புரெட்டியார்,
சென்னை.

பக்தி மலையளவாகவும் தோற்றம் அளிக்கும். பெரியாழ்வாரின் பக்தியையும் அவர்தம் அருமை மகள் ஆண்டாள் பக்தியையும் சீர்தூக்கினால், பெரியாழ்வார் பக்தி அணுவளவிலும் ஆண்டாள் பக்தி மலையளவிலும் தோன்றா நிற்கும். (சுப்புரெட்டியார், ந: பாண்டிநாட்டுத் திருப்பதிகள்-கட்டுரை-7 வில்லிபுத்தூர் வேயர் பயந்த விளக்கு பக். 126. காண்க.)

இந்நிலைக்குக் காரணம் என்ன? இருடிகளின் பக்தி சொந்த முயற்சியால் வளர்த்துக் கொண்டது. ஆழ்வார்கள் எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப் பெற்று, சம்சார உலகினின்றும் எழுப்பப் பெற்றவர்கள். பெரியாழ்வார் பொங்கும் பரிவால், எம்பெருமானுக்குத் தீங்கு வராமல் மங்களாசாசனம் செய்தவர். ஆண்டாள் தானே சென்று எம்பெருமானை எழுப்பித் தன் குறையை அறிவித்தவள். ஆடவன் ஆடவனைக் கண்டு நட்புக் கொள்வதைக் காட்டிலும் நங்கை ஆடவனைக் கண்டு நட்புக் கொள்வது பள்ளமடையாக இருக்கும்.

**வேங்கடத்தெம்மான் மீது காதல் :**

ஆண்டாள் திருமலையப்பன் பால், மேகத்தைத் தூதுவிடுவதாக அமைந்த நாச்சியார் திருமொழியிலுள்ள பதிகம் ஒன்று அன்னையாரின் கழி பெருங் காதலைக் காட்டுகின்றது. தூதுப் பாடல்களும் பிரபந்தங்களும் 'காமம் மிக்க கழிபடர் கிளவிகளா'கும்.

இயம்புகின்ற காலத்து
  எகினம் கிள்ளை
பயம்பெறு மேகம்பூ
  வைபாங்கி—நயந்தகுயில்
பேதைநெஞ்சம் தென்றல்
  பிரமரம்ஈ ரைந்துமே

தொடை.

(எகினம் - அன்னம்; பிரமரம் - வண்டு) என்ற இரத்தினச் சுருக்கப் பாடலால் தூதுவிடுதற்குரிய பொருள்கள் இன்னவை என்பது அறியப்படும். இவற்றுள் மேகமும் ஒன்று. இவையெல்லாம்,

சொல்லுந போலவும்
கேட்குந போலவும்
சொல்லியாங் கமையும்
என்மனுர் புலவர்.
(தொல். பொருள். செய்யு 192)

என்ற நூற்பாவின் பகுதியால் பேசுவன போலவும் கேட்பன போலவும் அமைத்துக் கோடல் கவிதை மரபாக இருந்து வருகின்றது.

'கற்பூரம் நாறுமோ?' (நாச். திரு. 7) என்று திருச்சங்காழ்வாளுேடு சொல்லாடிப் பொழுது போக்கின அன்னே ஆண்டாளுக்கு அது மறுமொழி தரவில்லே. எம்பெருமானது பிரிவால் அவள் ஆற்ருமை மீதூர்ந்து செல்லத் தொடங்குகின்றது. காலமும் கார் காலமாக உள்ளது. மேகங்களும் 'ஆழியுட்புக்கு முகந்து கொடு ஆர்த்தேறி, ஊழி முதல்வன் போல் மெய் கறுத்து, பாழியந்தோளுடைப் பற்பநாபன்கையில், ஆழி போல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து' (திருப்பாவை-4) வந்து தோன்றுகின்றது. கார்காலத்தில் தவருது திரும்புவதாகக் கூறிப்போன எம்பெருமானின் திருவாக்கு அவள் நினேவிற்கு வருகின்றது. அப்படியே அவனும் மேகங்களுடன் வந்திருக்கக் கூடும் என்று நினேக்கின்ருள். "மேகங்காள் எம்பெருமானும் உம்முடன் வந்தாளுே!" என வினவுகின்ருள். அவை மறுமொழி தரவில்லே; அந்த எம்பெருமானும் அவள் கண்ணுக்குத் தென்படவில்லே. ஆகவே, தன்னுடைய நிலேமையை எம்பெருமானுக்கு அறிவிக்க வேண்டுமென்று மேகங்களே இரக்கின்ருள். இந்தத் திருமொழி முழுதும் மேகத்தைத் தூதுவிடுவ நோக்கி,

கண்ணீர்கள் முலேக்குவட்டிற்
துளிசோரச் சோர்வேனேப்
பெண்ணீர்மை ஈடழிக்கும்
இதுநமக்கோர் பெருமையே.
(நாச். தி. 8:1)

(குவடு-நுனி; துளிசோர-அரும்பு; சோர்வேனே-வருந்துகின்ற என்னே; ஈடு அழிக்கும் இது-உருவழிக்கின்ற இது; தமக்கு-அவருக்கு)

என்று வினவுகின்ருள். 'திருவேங்கடமுடையானேப் பெரியாழ்வாரின் திருமகள் ஆசைப்பட்டுப் பெருதொழிந்தாள் என்ருல் அவனுடைய பெருமை என்னுகும்?' என்கின்ருள்.

அடுத்து, மேகங்களே நோக்கி இவ்வாறு பேசுகின்ருள்;

மாமுத்த நிதிசொரியும்
மாமுகில்காள்! வேங்கடத்துச்
சாமத்தின் நிறங்கொண்ட
தாளாளன் வார்த்தையென்னே?
[நாச். திரு. 8:2]

(முகில்-மேகம்; சாமத்தின் நிறம்-நீல நிறம்; தாளாளன் - பெருமை பாராட்டி நிற்பவன்).

என்பது அவள் திருவாக்கு. "வள்ளண்மை வாய்ந்த மேகங்களே! கைம்மாறு கருதாது, யாரும் வேண்டாத நிலேயில், விலேயுயர்ந்த பொன்னேயும் முத்துகளேயும் பொழிகின்றீர்கள். இப்படிப்பட்ட நீங்கள், அடி வீழ்ந்து வேண்டுகின்ற எனக்காக ஒருவாய்ச் சொல் நல்கலாகாதோ? திருவேங்கடமுடையானுடைய செய்தி உங்கட்குத் தெரியாமலிராதே; ஏதாவது சொல்லுங்கள்' என்கின்ருள்.

மேகங்களோ வாய்ப்பூட்டு போட்டாற்போல் வார்த்தை சொல்லாமல் வாளா இருக்கின்றன. இதனுல் தன் ஆற்ருமையின் கனத்தைச் சொல்லி வருந்துகின்ருள்.

காமத்தீ யுள்புகுந்து
கதுவப்பட் டிடைக்கங்குல்
இலக்காய்நான் இருப்பேனே.
(நாச். திரு. 8:3)

(கதுவப்பட்டு-அறுக்கப்பட்டு; கங்குல்-இரவு; இடை ஏமம்-நள்ளிரவு)

"காமத்தீ என்னுள் புகுந்து என்னே வாட்டுகின்றது. நள்ளிரவில் ஒரு தென்றற் காற்றுக்கு நான் இலக்காகி எவ்வாறு இருப்பேன்? தென்றல் காமத்தீயிற்குத் துணேயாக இருந்து நோயை அதிகப்படுத்துகின்றதே. உள்ளே காமத்தீ; வெளியே தென்றற் காற்று. இருதலேக் கொள்ளிக்கிடையில் அகப்பட்ட எறும்புபோல் இவற்றுக்கிடையே தடுமாறிக் கிடக்கின்றேன்' என்று வருந்துகின்ருள்.

"எம்பெருமானேப் பிரிந்து பட்ட துக்கத்திளுல் என் மேனியழகு கெட்டது. உடல் இளேத்தமையால் வளேயல்கள் கழன்ருெழிந்தன. நானும் நெஞ்சு தளர்ந்து உறக்க மொழிந்து கிடக்கின்றேன். இந்த நிலேயில் எம்பெருமானின் திருக்குணங்களே எங்ஙன் போற்றி உயிர் காத்திருக்க முடியும்? எளியாரை எல்லாரும் கைவிடுவது உலக இயல்பேயன்ருே?

ஒளிவண்ணம் வளேசிந்தை
உறக்கத்தோ டிவையெல்லாம்
எளிமையால் இட்டென்னே
ஈடுஅழியப் போயினவால்.
(நாச். திரு. 8:3)

(ஒளி-உடல் காந்தி; வண்ணம்-நிறம்; வளே-வளேயல்; சிந்தை-நெஞ்சம்; உறக்கம்-தூக்கம்; ஈடுஅழிய-சீர்குலேயும்படி).

என்பது அவளுடைய நெஞ்சக் குமுறல். இங்ஙனம் தன் நிலேமை மேகங்கட்கு உணர்த்திச் சில செய்திகளே வேங்கடவாணன்மாட்டுச் சொல்ல வேண்டுகின்ருள்.

முதற்செய்தி :

ஆண்டாள் தெரிவிக்க விரும்பும் முதற்செய்தி இது: "என் மார்பிலுள்ள இளமுலேகளே அவ்வெம்பெ

...ணந்து கொண்டே கிடக்க வேண் டும் ஒன்று நான் ஆசைப்படுகின் றேன்" என்பது.

என்ஆகத் திளங்கொங்கை
விரும்பித்தாம் நாடோறும்
பொன்ஆகம் புல்குதற்கு
என்புரிவுடைமை செப்புமினே.
(நாச். திரு. 8:4)

(ஆகம்-மார்பு; தாம்-எம்பெரு மான்; பொன் ஆகம்-விரும்பத்தக்க மார்பு; புல்குதல்-அணைதல்; புரிவு டைமை-ஆசையுடைமை.)

என்பது பிராட்டியாரின் திரு வாக்கு. "ஒரு பொருளிலே விருப்ப முள்ள சிறுர்களைப் பெற்றோர் எவ் வளவு சமாதானப்படுத்தினலும் அவர்கள் சமாதானம் அடைவதில்லே. விரும்பின பெறும் வரையிலும் விடாத பிடிவாதங்கொள்வது போல், என் இளங்கொள்கைகளும் அவ்வெம் பெருமானுடைய திருமார்புடன் அணைய வேண்டும் என்று பிடிவாதம் செய்கின்றன." என்கின்றுள். "சொற் கேளாத பிரஜைகளைப் (பிள்ளைகள்) போலேயாய்த்து முலைகளின்படி" என்ற இன்சுவைமிக்க பெரியவாச் சான்பிள்ளையின் வியாக்கியான வாக் கியம் சுவைத்து மகிழத்தக்கது.

இரண்டாவது செய்தி :

"வான் கொண்டு கிளர்ந்தெழுந்த மேகங்களே, எம்பெருமான் என் னிடத்துப் பறித்துப் போன கைவளை யல்களைத் திருப்பிக் கொடுப்பதாக இருந்தால் என் நிலையைத் தெரிவி யுங்கள்" என்பது இரண்டாவது செய்தி.

தான்கொண்ட சரிவளைகள்
தருமாகில் சாற்றுமினே."
(நாச். திரு. 8-5)

என்பதால், அவனுடைய மன ஈடு பாட்டை அறிந்து கொண்டு தன் நிலையைத் தெரிவிக்குமாறு வேண்டு கை என்ற குறிப்பும் இதில் புலனு கின்றது. சாற்றுமினே: "அவன் தரிலுப் தருகின்றுன், தவிரிலும் தவிருகின்றுன்; நீங்கள் அறிவித்துப் போருங்கள்" என்ற வியாக்கியான வாக்கியமும் கண்டு மகிழத்தக்கது. அன்றியும், "அவனுடைய திருவுள் ளத்தை நீங்கள் அறிந்து கொண்டு அதனை என்னிடம் வந்து 'சாற்றுங் கள்'" என்றும் கொள்வதற்குத் தட் டில்லை.

மூன்றுவது செய்தி :

தன்னுடைய நலன்களையெல்லாம் பறித்துச் சென்ற நாரணற்குத் தன்னுடைய நடலை நோயைத் தெரி விக்க வேண்டும் என்பது மூன்றுவது செய்தியாகும். இச்செய்தி தாங்கிய பாசுரம்;

சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த
தண்முகில்காள்! மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே
நிரந்தேறிப் பொழிவீர்காள்!
உலங்குண்ட விளங்கனிபோல்
உள்மெலியப் புகுந்தென்னை
நலங்கொண்ட நாரணற்கென்
நடலைநோய் செப்புமினே.
(நாச். திரு. 8:6)

(சலம்-கடல் நீர்; நிரந்து ஏறி- பரவியிருந்து; உலங்கு-பெருநுளும்பு (பெருங்கொசுக்கள்); நலம்-பெண் மைக்குரிய நான்கு முதலிய குணங் கள்; நடலை நோய் - நிற்பது, இருப் பது, விழுவது, எழுவதாய்ப்படு கின்ற நோய்).

பாசுரத்தின் பொருள் தெளிவு. சில சொற்றொடர்களின் நயம் நம் மனத்தைக் கவர்கின்றது. 'மாவலி யை......பொழிவீர்காள்": பயனையே கருதுபவர்களான (பிரயோஜநாந்தர பரர்களான) தேவர்களுக்காகத் தன்னை வாமன மாணியாக்கிக் கொண்டு இரந்து மூன்றடிமண் பெற்ற பெருமான் எழுந்தருளியிருக் கின்ற தேசத்தில் வாழும் நீங்கள் பயன் கருதாத எனக்காகக் (அநந்யப் பிரயோஜனையான எனக்காகக்) காரி யம் செய்ய வேண்டாவோ? எம்பெரு மான் ஓர் அசுரன் பக்கல் சென்று காரியம் செய்தது போல் நீங்களும் ஓர் அசுரன் பக்கல் சென்று காரியம் செய்ய வேண்டும் என்று நான் சொல்லுகின்றேன்? இல்லையே: உடை

# வையத்தை இயக்கும் வைதிகம்

உலகில் உள்ள மற்ற தேசங்கள் எதிலும் வைதிக ஆசாரம் இல் லாதபோது நமக்கு மட்டும் இது எதற்கு என்று கேட்கிற பாரதீயர் (இந்தியர்)களும் இருக்கிறுர்கள்.

ஒரு ரயில் இருக்கிறது. அதில் பல பெட்டிகள் இருக்கின்றன. ஆனல் ஒரே ஒரு டிரைவர்தான் இருக்கிறுர். அவர் அந்தப் பெட்டி கள் எதிலும் இருப்பதில்லே. என்ஜினில் இருக்கிறுர். அவர் என்ஜின் ஓட்டுவதாலே அத்தனை பெட்டிகளும் அந்த வழியில் ஓடுகின்றன.

உலகம் என்ற ரயிலில் ஏனைய சகல நாடுகளும் பெட்டிகள்; பார தமே என்ஜின். அந்த என்ஜினை நல்ல வழியில் ஓட்டுவது வைதிக தர் மம் என்ற ஸாரதியேயாகும். நம் ஒரு நாட்டில் வைதிக தர்மம் கடைப்பிடிக்கப்பட்டாலே போதும்; உலகமனைத்தும் நல்ல மார்க்கத் தில் செல்லும். மற்றப் பெட்டிகளில் டிரைவர் இல்லாததால் என்ஜி னிலும் டிரைவர் வேண்டாம் என்பது போலாகும், நாமும் மற்ற நாடு களைப் பார்த்து வேத தர்மத்தைக் கைவிடுவது!

— ஸ்ரீ சத்ய சாயிபாபா.

தொகுத்தவர் : கமலா மாரியப்பன்.

போகுமாறு வேண்டுகின்றேன்'' என்ற குறிப்பு இதில் புலப்படுவதைக் கண்டு மகிழலாம். 'ஏறிப்பொழிவீர்காள்!': "சாய்கரத்தை உயர வைத்துத் தண்ணீர் வார்ப்பாரைப் போலே, காணவே விடாய் கெடும்படி உயர வேறி வர்ஷிக்கிறி கோளிறே; அவன் வர்த்திக்கிற (இருக்கிற) தேசத்திலே அவனோடே உங்களுக்கு ஒரு சம்பந்த முண்டானால் அவன் ஸ்வபாவமுண்டாக வேண்டாவோ?'' என்ற ஆச்சான் பிள்ளையின் வியாக்கியான வாக்கியம் கண்டு அநுபவிக்கத் தக்கது.

"உனக்காக யாம் செய்யத் தக்கது என்ன?''வென்று அந்த மேகங்கள் வினவ;.

நடலைநோய் செப்புமினே'.

என்று அந்த மேகங்கள் செய்யத் தக்கதைச் செப்புகின்றாள். "உலங்கு என்ற பெருங் கொசுக்கள் விளாம் பழத்தில் மொய்த்தால் அதன் சாறெல்லாம் சுவறிப்போவதுபோல், என் உடம்புடன் அணைந்து என் ஆற்றல் முழுவதையும் கொள்ளை கொண்ட பெருமானுக்கு நான் இங்ஙனம் நோவுபட்டுக் கிடக்கும் நிலையை எடுத்துக் கூறுங்கள்'' என்று வேண்டுகின்றாள்.

நான்காவது செய்தி :

இஃது உயிரனைய செய்தியானதால் சொல்லும் போதே மிகப் பணிவாகத் தொடங்குகின்றாள்.

தண்முகில்காள்! வேங்கடத்துச்
செங்கண்மால் சேவடிக்கீழ்
அடிவீழ்ச்சி விண்ணப்பம்.

(நா. திரு. 8:7)

(சங்கம்-சங்கு; மா-பெருமை வாய்ந்த; சேஅடி-செவ்விய அடி; அடி வீழ்ச்சி-அடியேனுடைய)

என்ற பீடிகையுடன் தொடங்குவது கண்டு மகிழத் தக்கது. அதற்குப் பிறகு சொல்ல வேண்டிய செய்தியைத் தெரிவிக்கின்றாள்.

கொங்கைமேல் குங்குமத்தின்
குழம்பழியப் புகுந்தொருநாள்
தங்குமேல் என்ஆவி
தங்குமென்று உரையீரே.

(நா. திரு. 8:7)

(44-ம் பக்கம் பார்க்க)

# ஐயனை ஆண்டாள் அழைக்கும் அழகு!

ஆண்டாள் அருளிய இரு பிரபந்தங்கள் நாச்சியார் திருமொழி, திருப்பாவை என்று பிரசித்தி பெற்றவை. அவற்றில் திருப்பாவையை மட்டும் நாம் இங்கே காண்போம். அவள் தெய்வத் தமிழிலே பக்தியும் ஞானமும் நனி சொட்ட எம்பெருமானை விதவிதமாக அழைத்துக் கொண்டாடுவாள். அத்தகைய ஓர் இடம் 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்பது. இது போல எழுபது-அறுபது இடங்களில் வரும். அவற்றில் பலவற்றை ஓர் ஓட்டத்தில் நாம் பார்க்கலாம்.

ஓங்கி உலகளந்த என்ற சொற்கள் வருவது இரண்டு இடங்களில். ஓர் இடம் ஓங்கி உலகளந்த உத்தமன் என்பதென்றால், அம்பரம் ஊடறுத்தோங்கி உலகளந்த உம்பர் கோமான் என்பது மற்ற இடம். ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு பிரபஞ்சப் பரவெளியையெல்லாம் தாண்டிச் சென்று அதிசயம் புரிந்த ஐயனின் திருவடியை ஆண்டாள் இப்படிப் பேசுவாள்.

எம்பெருமானின் தந்தை, தாய், பிறந்த இடம், படுத்த இடம் இவற்றைப் பேசும் வாசகங்களும் நிறைய உள்ளன. மாயன், வடமதுரை மைந்தன் தூயப் பெருநீர் யமுனைத் துறைவன் ஆவான். கண்ணனுக்கு உரிய நதி யமுனை; தூய்மையே அதன் பெருமை! (ஆம், கங்கையளவு அது இன்னும் தூய்மை கெடாதிருக்கிறது). ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம் என்னும் வர்ணனையில் அன்னையின் கண்ணழகு, குழந்தையின் இளமை-உயிர்த்துடிப்பு யாவுமே பேசப் பெறுகிறது. சிங்கக்குட்டியாம் கண்ணபிரானின் அழகினைப் பார்த்துப் பார்த்து, யசோதையின் கண்களுக்கும் ஒரு தனியழகு வந்து குடியேறி விட்டது!

அப்பனைப் பற்றிய பேச்சு, கூர் வேல் கொடும் தொழிலன் நந்தகோபன் குமரன் என்பது. பிள்ளைக்குப் பிறந்ததிலிருந்தே அபாயத்திற்கு மேல் அபாயமாக வந்து கொண்டிருப்பதால், வேலைக் கூர்மையாகத் தீட்டி வைத்துக்கொண்டு நந்தகோபன், மைந்தனைப் பாதுகாப்பதாகப் பொருள் கூறுவர். அன்னையைக் கூறும் அழகிய வாசகம்- தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனே!

இங்கே இரண்டு அன்னையரும் வந்து விடுவர். தாமோதரன் என்பது கண்ணபெருமான் தீம்புகள் செய்துவிட்டுக் கயிற்றினால் கட்டுண்டு உரலோடு இணைந்து நிற்கும் நிலையை உணர்த்தும் பெயர். இங்கே வளர்ப்புத்தாய் யசோதை மறைந்து நிற்கிறாள் எனில், பெற்ற தாய்க்குப் பெருமை சேர்த்த சிறப்பு போய்ச் சேர வேண்டியது தேவகிப் பிராட்டிக்கு. தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரன்! - ஒரு கல்லில் இரு மாங்கனிகள்.

ஆயர்குலத்தினில் தோன்றும் அணிவிளக்கு! - ஆய்ப்பாடிக்கு அழகிய மங்கள விளக்காக அவதரித்தவனது மாட்சிமை பேசியாகிறது.

பாற்கடலில் பையத் துயின்ற பரமன் எனும் பேச்சு, அவதாரத்திற்கெல்லாம் முந்தைய, திருப்பாற்கடல் காலத்துக் காட்சியைக் கண் எதிரே நிறுத்துகிறது. எங்கே, எதன் மீது படுத்துள்ளான் பரமன்? வெள்ளத்தரவில் துயில் அமர்ந்த வித்து அவன்! நட்ட நடுக் கடலில் பாம்பின் மீது பள்ளிகொண்ட பரந்தாமன் பயம் இல்லாது படுத்துள்ளார் எனில், அது தண்ணீர்ப்பாம்பு தான். வெள்ளம் = தண்ணீர், அரவு=பாம்பு. அது ஒன்றும் செய்யாது. துயில் அமர்ந்த வித்து என்ற வாசகத்தில் மூன்று சொற்களுமே ஒன்றுக்கொன்று பொருந்தாது, தனித்தனியே நிற்பன. வித்து என்றால் விதையா இங்கு? விதை தூங்குமா? அமர்ந்து கொண்டே, அதாவது உட்கார்ந்து கொண்டே தூங்குகிறாரா சர்வேசுவரன்?

வித் என்றால் அறிபவன். வேத வித் என்றால், வேத வித்வான். இங்கே பரமன் அறிதுயில் எனும் யோக நித்திரையில் உள்ளார். இவரேதாம் இன்னோர் பாசுரத்தில் 'ஆலின் இலையாய்' என அழைக்கப் படுவார். பிரளய காலத்தில் ஓர் ஆல் இலையின் மீது சின்னஞ்சிறு குழந்தையாய்த் தாமே மாறிப் புது யுகத்தைத் தொடங்கி வைக்கிறார்- சகல ஜீவராசிகளையும் விழுங்கி வயிற்றில் போட்டுக்கொண்டு!

---

திரு. ர. வேங்கடரத்தினம்—நெய்வேலி.

---

ஆண்டாள் எம்பெருமானின் அழகிய தோற்றத்தை அழகாக எடுத்துப் பாடுபவள். அவனது ரூபலாவண்யத்தில் மையல் கொண்டு, சூடிக் கொடுத்த சுடர்க்கொடி ஆயிற்றே அவள். ஐயனின் அழகு பேசியாகும் இடங்கள் இதோ!

பாழியன் தோளுடை பற்பநாபன்

கார்மேனிச் செங்கண்

கதிர் மதியம் போல் முகத்தான்

பங்கயக் கண்ணன்

செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமால்

## சதுர்புஜ ராமன்

வால்மீகி ராமாயணத்தின்படியே ராமன் மூன்று சந்தர்ப்பங்களில் சதுர்புஜதாரியாய் தரிசனம் அளிக்கிறார். அவதார காலத்திலேயே கௌசல்யாதேவிக்கு.

பிறகு ரிசியமுக பர்வதத்தில் ஆஞ்சநேயருக்குத் தரிசனம் அளிக்கிறார்.

போர்க்களத்தில் தசக்ரீவன் சாய்ந்து விட்டான். எதிரே நிற்கும் மயன் புத்ரி தசகந்தரன் மனைவி மண்டோதரிக்கு, சதுர்புஜனாக காட்சி தருகிறார் இராமர்.

இப்படி மூன்று சந்தர்ப்பங்களில் ராமன் சதுர்புஜதாரியானார் என்கிறது இதிகாசம்.

**திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.**

இங்கு நமக்கு இறைவனின் எழில் தோற்றம் எதிர்ப்படுகிறது. செங்கண்களில் தாமரை வண்ணம் தெரிகிறது எனில், அதற்கும் மேல் தாமரைச் செல்வியும் ஆண்டாளுக்குத் தோற்றம் தருகிறாள். செங்கண்—திருமுகம்—செல்வம்—திருமால்!

எல்லாம் ஒரே இலட்சுமிகரம்! திருமுகம் எனில் இலட்சுமி கடாட்சம் தெறிக்கும் முகமண்டலம். போதாதென்று, செல்வம் என்றொரு விளக்கம். அதற்கும் மேலே, திருமால் என்னும் ஸ்ரீமான்! ஆக, ஒரே செழுமையும் வளமும் கொழித்துக் கொட்டும் வாக்கியம்!

திருக்கரங்களில் உள்ள ஆயுதங்கள் பேசப்படும் வாக்கியம் இது—

சங்கொடு சக்கரம் எழுதும் தடக்கையன்.

திருமுடியில் திருத்துழாய் மணக்கும்—நாற்றத்துழாய் முடி நாராயணன்!

இவ்வளவும் புறத்தோற்றம் பேசும் இடங்கள்.

ஐயனின் அகச் சிறப்புகளைக் காண வேண்டுமா?

போற்றப் பறைதரும் புண்ணியன்.

அடியவர்கள் போற்றுதற்கு மாறாக, எம்பெருமான் அவர்களுக்குப் பறை அருள்வான்.

உலகினுக்கே சுடர்விளக்குப் போன்றவன் இறைவன்.

ஆயர்குலத்தினில் தோன்றிய அணிவிளக்கு, வெறும் ஆய்ப்பாடிக்கு மட்டும் ஆன சுடரொளி அல்ல.

உலகினில் தோற்றமாய், நின்ற சுடரே!

இச்சுடர் கம்சனின் வயிற்றெரிச்சலைக்கொட்டிக் கொண்டதும் உண்டு.

கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமாலே!

இப்படியே பிற துஷ்ட நிக்ரகச் செயல்களும் பாடப்படும்.

கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா.

வந்து சேராது, ஒதுங்கி நிற்போரை வெல்பவர் கண்ணபிரான்.

மாவாய் பிளந்தான் — குதிரை வாயைக் கிழித்துப் போட்ட கதையிது!

மல்லரை மாட்டிய தேவாதி தேவன்—கம்சன் அனுப்பிய மல்யுத்த வீரர்களை மாய்த்த வீர பிரதாபம் பேசியாகிறது.

வல்லானைக் கொன்றான்—குவலயாபீடம் மடிந்த விருத்தாந்தம்.

மாற்றானை மாற்றழிக்க வல்லான்-எதிராளியை எதிர்த்து நிற்பவன்.

செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலன் — பகைவர்களுக்குச் சூடு காட்டுவான்; ஆனால் இவர் மீது குற்றம் கிடையாது. தப்புப் பண்ணினால் விடமாட்டார்; இவர் விமலன் தான்!

கோபம் வந்தால் மட்டும் விடமாட்டார்.

சினத்தினால் தென் இலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியான்-இது இராமாயணம்.

பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தான்—இதுவும் அதுவே;

தலைகளைக் கொய்து சாய்த்த இராவண வத நிகழ்ச்சி?

புள்ளின் வாய் கீண்டான்—பகாசுர வதம் இது. கொக்காகக் கண்ணன் எதிரே வந்தான்; இவன் பெரிய கொக்கோ என்று வாயை ஒரேயடியில் கிழித்துப் போட்டார் எம்பெருமான்.

ஆண்டாள், திருப்பாவையில் சர்வேசுவரனின் பரிபூரணத் தன்மையைச் சுட்டிக்காட்டாது விடவில்லை. இவர் என்ன ஒழுங்கோ என எவரேனும் கேட்கக் கூடுமோ?

குற்றம் ஒன்று இல்லாத கோவலர்—இப்படி ஒரு விளக்கம், பரிபூரண சொரூபத்திற்கு.

குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தா — இது ஓர் அழைப்பு ஐயனை நோக்கி.

இரண்டு அடிகளையும் இணைத்துப் பார்க்கின், குற்றம்-குறை அற்றவன் ஆண்டவன் என்றமைகிறது. குற்றம் என்பது செய்வது; குறை என்பது அமைந்திருப்பது. இரண்டுமே இல்லாத பரிபூரணன் சர்வேசுவரன்!

*

# தெரிந்தும் தெரியாதன....

திரு. ஏ. சுந்தரராஜன்
சென்னை

**ஆசார்ய ஹ்ருதயம் :**

இந்நூல் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரால் (பிள்ளை லோகாசாரியருடைய தம்பி) இயற்றப்பட்டது. இந்நூல் நம்மாழ்வாருடைய சிறப்பையும் பெருமையையும் அவருடைய அருளிச்செயல்களையும் (திருவாய் மொழி முதலியன) ஏனைய ஆழ்வார்களின் அருமை பெருமைகளையும் விளக்குகின்றது. நம்மாழ்வார் பற்றிய சிறந்த ஆய்வு நூலாக இதைச் சொல்லுவர்.

இந்நூல் நான்கு பகுதிகளை உடையது. இந்நூலாசிரியர் பெரும்பாலும் ஆழ்வார் பாசுரங்களை—அடிகளையும் தொடர்களையும் — இடையிடையே தம்முடைய சில சொற்களைக்கொண்டு இணைத்து இந்நூலை ஆக்கியிருப்பது பாராட்டத்தக்கது.

**ஆவணி அவிட்டம் :**

பண்டைய கல்வி முறையில் காணப்படும் ஒரு முக்கிய திட்டம் இது. இந்நாட்களில் குறுகிய அளவில் ஒரு நினைவு நாளாக மட்டுமே கொண்டாடப்படுகிறது.

ஆவணி வந்ததும் கார்காலம் வந்துவிடும்; அதுமுதல் நான்கு மாதங்கள் வெளியே போக முடியாது. பண்டைக் காலத்திலிருந்தவர்கள் தாம் கற்ற கல்வியை மறந்து போகாமல் மனதில் நிலைத்து நிற்கும்படி செய்வதற்கு மனப்பாடம் செய்யும் காலமாக இந்தக் காலத்தைப்பயன்படுத்தினர். இக்காலம் ஆவணிமாதம் பௌர்ணமியில் திருவோண நக்ஷத்திரத்திலோ அவிட்ட நக்ஷத்திரத்திலோ தொடங்கும். அதனால் இந்த அத்யயனத் தொடக்கம் என்பதை உபாகர்மம் என்னும் சொல்லால் குறிப்பதுண்டு; ஆவணி அவிட்டம் என்றும் வழங்குவதுண்டு.

இந்த விழாவை தொடங்கும் பொழுது வேதங்கள் முதலியனவற்றிற்கு ஆதாரமான முனிவர்களின் பெயரைச் சொல்லி தர்ப்பணம் செய்வதுண்டு. கல்வியின் தேவதைகளான மேதை, சிரத்தை முதலியனவற்றைத் துதித்து ஹோமம் செய்வார்கள். பூணூலைப் புதுப்பித்துக் கொள்வார்கள்.

இந்த விழாவிற்கு ரிக்வேதிகளுக்கு திருவோண நக்ஷத்திரம் முக்கியம். யஜுர்வேதிகளுக்கு பௌர்ணமி திதி முக்கியம். சாமவேதிகள் புரட்டாசி ஹஸ்த நக்ஷத்திரத்தில் இதை செய் செய்வார்கள். தை, மாசியில் உத்சர்ஜனம் (முடிவு விழா) ஓதுதலை முடித்துக் கொள்வார்கள். இது பண்டைய முறை.

இக்காலத்தில் ஆண்டு முழுவதும் ஓதல் நடைபெறுவதாக வைத்து, முடிவுச் சடங்கை ஆவணி அவிட்டத்தன்று செய்துவிட்டு, துவக்கவிழாவை செய்து வருகிறார்கள்.

**ஆழ்வார்கள் :**

பதின்மர். அவர்கள், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் எனப்படுவர். ஸ்ரீ ஆண்டாளையும் ஸ்ரீ மதுரகவியாழ்வாரை சேர்த்து பன்னிருவர் எனக் கூறுதலும் உண்டு.

இவர்கள் இறைவனுடைய கல்யாண குணங்களிலே ஈடுபட்டு அழுந்தினவர்களாதலின் ஆழ்வார்கள்எனப்பட்டனர். இறைவனுடைய வடிவழகில் ஈடுபட்டு அழுந்தியவர்களாதலால் ஆழ்வார்கள் எனப்பட்டனர் என்பர். மக்கள் படும் துக்கத்தைக் கண்டுபொறாமல் அத்துக்கத்தில் அழுந்தினவர்களாதலின் ஆழ்வார்கள் எனப்பட்டனர்.

பகவத் குணங்களிலும் அவனுடைய வடிவழகிலும் ஈடுபட்டு அழுந்தின காரணத்தால் சுவாநுபவமும், பிறர் துக்கம் கண்டு பொறாது அழுந்தின காரணத்தால் பரோபதேசமுமான இருநிலைகளும் இவர்கட்கு மாறி மாறி தோன்றலாயின. இவ்விருநிலைகளின் காரியங்களே நாலாயிரப்பிரபந்தம் என்னும் தமிழ்மறையாகும்.

'பிறரை அடிமை கொண்டு ஆள்பவர்' என்ற பொருளில் 'ஆள்வார்' வழங்கி வந்தது. பின்பு ழகர ளகர வேற்றுமையின்றி, ஆழ்வார் என்று திரிந்திருக்கலாம் என்றும் 'ஆள்' என்பதே இதன் பகுதியாக வேண்டும் என்றும் மு. இராகவையங்கார் 'ஆழ்வார்கள் கால நிலை' என்னும் நூலில் விளக்கி காட்டியுள்ளார்.

ஆழ்வார்கள் அருளிச் செய்த தத்துவங்கள் மூன்று: சித்து, அசித்து, ஈஸ்வரன்.இவை பிரகார பிரகாரிகள் ஐக்கியத்தால் ஒன்று என்னலாய்ச் சொரூப பேதத்தாலே பல என்னலாய் இருக்கும். இதனாலே, இது விசிஷ்டாத்வைதம் எனப்பெறும்.

இவற்றுள் சித்தாவது உயிர்; அசித்தாவது மக்கள் விலங்கு முதலியவற்றின் உடம்புமுதலிய உலகப்பொருள்களெல்லாவற்றிற்கும் காரணமாய பிரகிருதி. இதனை மூலப்ரக்ருதி என்பர். ஈஸ்வரன்—இறைவன்.

இவை மூன்றும் தனித்தனி இயல்பையுடைய வெவ்வேறு பொருள்கள். என்றும் அழிவில்லாதவை. ஆயினும், இவை மூன்றும் எக்காலத்தும் சேர்ந்தே இருக்கின்றன.

இவற்றுள் இறைவன் சித்து, அசித்து இரண்டனுள்ளும் அந்தர்யாமியாக உள்ளான்.

நாராயணன் என்னும் பெயருள்ளவனே பரம்பொருள். நாராயணன் என்பது நாரம்+அயனம் என்னும் சொற்களாலாய தொடர். நாரம்—அழிவில்லாத பொருள்களின் கூட்டம். அவையாவன: மூலப்பகுதியில் விகாரமாயுள்ள எல்லாப் பொருட்களும்; எல்லா உயிர்களும் மோட்சத்திலுள்ள எல்லாப் பொருட்களுமாம். அயனம்—இடம்.

நாராயணன் என்னும் இத்தொடர் அழிவில்லாப் பொருட்களின் கூட்டத்திற்கு இடமாக உள்ளவன் என்றும், அழிவில்லாப் பொருட்களின் கூட்டத்திற்கு இடமாக உள்ளவன் என்றும் இருபொருள் கொள்ளுதற்குரியது.

மற்றும் கருமம், ஞானம், பக்தி பிரபத்தி என்னும் நான்கனுள் பிரபத்தி நெறியே இறைவனை அடைவதற்குரிய சிறந்தநெறி என்பதும், இறைவனை அடையும் பொழுது பெரிய பிராட்டியார் புருஷகாரமாக அடையவேண்டும் என்பதும் ஆழ்வார்கள் கொண்ட முடிபொருள்களாகும்.

**ஆன்மா :**

"அன்" என்னும் வேர்ச் சொல்லின் அடியாக 'ஆன்மா' —உயிர்ப்பது என்னும் பொருள் உணர்த்தப் படுகிறது. ஆனல் உயிர் என்னும் பொருளுடைய பிராணன் என்னும் சொல்லுடன் சம்பந்தமுடையது அன்று.

ஆன்மா உடலிலிருந்து வேறுபட்டது. உடல் இறந்த பிறகும் உள்ளதும், உடல் போன பின் பூமியில் செய்த செயல்களின் பயனைத் துய்ப்பதுமான மனித ஆவியையே குறிக்கிறது. உபநிடதங்களிலும் இந்தப் பொருளிலேயே ஆளப்பட்டு இருக்கிறது. சில சமயங்களில் அது உபநிடதச் சொல்லான பிரமம் என்பதற்கு பதிலாக வந்துள்ளது. அப்பொழுது அதன் பொருள் பிரபஞ்சத்தின் மூல தத்துவம் என்பதாகும்.

வைதீக தரிசனங்கள் ஆளும் நித்தியமான ஆத்மா வேறு; அநித்திய மான உடல் வேறு என்பதை ஏற்றுக் கொள்ளுகின்றன. இந்த தரிசனங்களிடையே வேறு சில சிறு வேறுபாடுகள் காணப்படினும், புறத்தேயிருந்து வந்து உடலில் புகுந்துவிட்ட மாசுகள் எல்லாம் நீக்கிவிட்டால் எஞ்சி நிற்பது ஆன்மா என்பதே அவை அனைத்தும் கூறும் முடிவாகும்.

**ஆஸ்தீகம் :**

"அஸ்தி" என்னும் பதத்திற்குப் பொருள் 'உள்ளது' என்பதாகும். பரலோகம் உள்ளது என்றும் பின்னர் நாளடைவில் ஈசுவரன் உளன் என்றும் வேதப் பிரமாணம் உளது என்றும் கூறுவர். பரலோகம், ஈசுவரன், வேதப் பிரமாணம் மூன்றும் உள்ளனவாக ஏற்றுக்கொள்பவர் ஆஸ்திகர்.

ஃ ஃ ஃ

## ஆய கலைகள் அறுபத்தி நான்கு

சுக்கிரநீதியில் சொல்லப்பட்டவை ஆண்களுக்கு ஏற்றவை. சைவ தந்திரத்தில் சொல்லப்பட்டவை பெண்களுக்கேற்றவை. இங்குக் கூறப்பட்டவை சைவ தந்திரத்தில் கூறப்பட்டனவையாகும்.

அவையாவன :—

(1) கீதம் (2) வாத்யம் (3) நிருத்யம் (4) ஆலோக்யம் (5) விசேஷகச்சேத்யம் (6) தண்டுலகுஸுமவிகாரம் (7) புஷ்பாஸ்தரணம் (8) தானவஸனங்கராகம் (9) மணிபூமிகாகர்மம் (10) சயனரசனம் (11) உதகவாத்யம் (12) உதகாகாதம் (13) சித்ர யோகங்கள் (14) மால்யக்ர தனவிகல்பம் (15) சேகரகாபீடயோஜனம் (16) நேபத்ய ப்ரயோகம் (17) கர்ணபத்ரபங்கம் (18) கந்தயுக்தி (19) பூஷணயோஜனம் (20) ஐந்த்ரஜாலம் (21) கௌசுமாரயோகம் (22) ஹஸ்தலாகவம் (23) விசித்ர சாக யூஷபக்ஷ்யர்காரக்ரியா (24) பானகரஸராகாஸவயோஜனம் (25) ஸூசீவானகாமம் (26) ஸூத்ரக்ரீடா (27) வீணாடமருகவாத்யம் (28) ப்ரஹேளிகா (29) ப்ரதிமாலா (30) துர்வாசகயோகம் (31) புஸ்தகவாசனம் (32) நாடகாக்யாயிதர்சனம் (33) காவ்யஸமஸ்யாபூரணம் (34) பட்டிகாவேத்ரவான விகல்பம் (35) தக்ஷகர்மம் (36) தக்ஷணம் (37) வாஸ்துவித்யா (38) ரூபயரத்னபரீக்ஷா (39) தாதுவாதம் (40) மணிராககரஜ்ஞானம் (41) விருக்ஷாயுர் வேதயோகம் (42) மேஷகுக்குடலாவகயுத்தவிதி (43) சுகசாரீகா ப்ரலாபணம் (44) உத்ஸாதனஸம்வாஹனகேசமர்த்தனகௌசலம் (45) அக்ஷரமுஷ்டிகாகதனம் (46) ம்லேச்சிதவிகல்பம் (47) தேச பாஷாவிஜ்ஞானம் (48) புஷ்பசகடிகா (49) நிமித்தஜ்ஞானம் (50) யந்த்ரமாத்ருகா (51) தாரணமாத்ருகா (52) ஸம்பாட்யம் (53) மானஸீ (54) காவ்யக்ரியா (55) அபிதானகோசச்சந்தோஜ்ஞானம் (56) க்ரியாகல்பம் (57) கவிதாயோகம் (58) வஸ்த்ர கோமனம் (59) த்யூத விசேஷம் (60) ஆகர்டிக்ரீடா (61) பாலக்ரீடனகம் (62) வைனயிகீவித்யாஜ்ஞானம் (63) வைஜயகீவித்யாஜ்ஞானம் (64) வ்யாயாமீகிவித்யாஜ்ஞானம்.

சில புலன்களுக்கு இன்பம் கொடுப்பவை
சில உடலுக்கு இன்பம் கொடுப்பவை
சில மனதிற்கு இன்பமளிப்பவை
சில வெறும் பொழுதுபோக்குக்கு உதவுவன
சில மற்றவரின் நட்பைப் பெற உதவுவன
சில பணம் சம்பாதிக்க உதவுபவை.

**'மயூரப்ரியா' சென்னை-91.**

**ஆதாரம் : 'கலைகளின் விளக்கம்' — ஸ்ரீமடம் காஞ்சி.**

# பகவானின் அவதாரங்கள்

சென்ற இதழ்த் தொடர்ச்சி

அர்ச்சோபாஸனை ப்ரதிகோபாஸனையல்ல :

விஷயங்களை அறியாதவர்களும் அரைகுறையாக க்ரஹித்தவர்களும் அர்ச்சை வழிபாட்டை கல்லைத் தொழுவதாக நினைத்து சில சமயம் கேவலமாக நிந்திக்கிறார்கள். மேலும், கடவுள் எங்குமுளனென்று சொல்லுபவர்கள் ஏன் கோயிலிலுள்ள கல்லை மாத்திரம் வணங்க வேண்டும், தெருவிலுள்ள கல்லை ஏன் பூசிப்பதில்லை என்று ஆடம்பரமாக வினவுகிறார்கள். இதற்கு ஓர் உதாஹரணத்தை இட்டு விடை கூறினால் விஷயம் எளிதில் புரியும். காற்று எங்குமுள்ளது என்பது யாவரும் அறிந்ததே. ஆயினும் காற்றடிக்கும் போதுதான் நாம் அதை உணர முடிகிறது. நமக்கு வேண்டும் போது காற்றடிக்காவிட்டால், நாம் சாதாரண அல்லது மின்சார விசிறியை உபயோகப்படுத்தியே காற்றை அடைய முடிகிறது. அவ்வாறே எம்பெருமான் எங்குமுளனென்பது உண்மையே. ஆனால் அவனைச் சாதாரண பொருள்களில் நம் போல்வார் காண முடியாது. அவன் இராம க்ருஷ்ணாதியவதாரங்கள் செய்தபோது அச்சமயத்தவர் அவற்றை அநுபவித்தனர். மற்ற சமயங்களில் உள்ளவர்கள் அவ்வெம்பெருமானை யநுபவிக்க விரும்பினால் அதற்குத் தகுந்த உபாயத்தை ஆகமங்களில் கூறியபடி அநுசரித்து அர்ச்சையில் அடையலாம். அர்ச்சையில் எம்பெருமானின் ஸாந்நித்யம் நிலைத்து நிற்க மூன்று காரணங்கள் பெரியோர்களால் காட்டப்பட்டுள்ளன.

**अर्चकस्य तु माहात्म्यात्**
**पूज्यबिम्बस्य सौष्ठवात् ।**
**पूजोपकरणैश्चैव**
**त्रिभिस्सान्निध्यमुच्यते ॥**

'அர்ச்சகரின் ஒழுக்க சீலத்தின் மஹிமையாலும், ஆராதிக்கும் பிம்பத்தின் அழகாலும், பூஜைக்கு உபயோகிக்கும் பொருள்களின் மேன்மையாலும்தான் பகவத் ஸாந்நித்யம் ஏற்படும்.'

மேலும், விக்ரஹாராதனையில் எம்பெருமானை தினமும் ஆவாஹனம் செய்ய வேண்டும். இது ஸாளக்ராமத்துக்குக் கிடையாது. அங்கு எம்பெருமானின் ஸாந்நித்யம் நித்யமாக உள்ளது. மேற்கூறிய விஷயத்தை உதயனாசார்யரும் இசைந்துள்ளார். ஆகவே, அர்ச்சையைப் பழிப்பது அறிவின்மை. ஆதர்சத்தை நிதர்சனமாகக் காண்பிப்பது அர்ச்சை.

பேராசிரியர் பி. என். ஸ்ரீநிவாஸாசாரியார் இவ்விஷயமாகக் கூறுவதாவது:

'அர்ச்சை என்பது மதப்பற்றுடன் கூடிய கற்பனா சக்தியினால் உண்டாக்கப்பட்ட ஓர் ஆதர்சமல்ல, அந்த மிலாதீயை அளவுபடுத்தும் ஓர் குறிப்பு மட்டுமல்ல. அது எம்பெருமானின் திவ்ய லாவண்யத்தின் அவதாரம், மானுஷ சக்ஷுஸ்ஸுக்கும் கோசரமாகும்படியான அவனுடைய ஸௌலப்யத்தின் வடிவு.

'இது ஓர் நாகரிகமற்ற பழங்கால வழக்கத்தின் தொடர்பு என்று கூறி, உயிருள்ள பேசும் தெய்வத்தைக் காணாமல் கேவலம் அர்ச்சையை உருவாக்கிய கல்லையோ, மரத்தையோ மாத்திரம் காணும் நாஸ்திகன், அன்பினாலுண்டாகும் கண்ணீரை அறிய விரும்பி அதைக் காணக் கண்ணை அறுத்துப் பார்க்கும் விஞ்ஞானிக்கு ஒப்பாவான்'

உண்மையில் பக்தர்களின் பொருட்டு கருணையினால் பகவான் செய்யும் அவதாரத்தின் உயர்ந்த எடுத்துக்காட்டாகும் அர்ச்சை. அளவற்ற பரம்பொருள் தன்னையளவுள்ளதாகச் செய்து கொள்ளும் ஒப்பற்ற செயல் அர்ச்சை. காண முடியாத பரமன் கல்லிலும், மரத்திலும், உலோகத்திலும் தன்னைக் காணும்படி காட்டிக் கொடுக்கும் அருஞ்செயல் அர்ச்சை. பக்தர்கள் தன்னைத் தொட்டுக் குலாவி, வழிபட்டுத் திருப்தியடைவதற்காக எம்பெருமான் போர்த்துக் கொள்ளும் வஸ்த்ரமாகும் இந்தப் புனித அர்ச்சா விக்ரஹம். எம்பெருமானுக்கு ஆடையுடுத்தி, அலங்காரம் செய்து மகிழும் பக்தன், அந்த விக்ரஹத்தில் அனந்த கல்யாண குணங்களையும், அளவிட முடியாத லாவண்யத்தையும், முககாந்தியையும், ஆபரணங்களின் சோபையையும் பருகுகிறான். ஆகவே, உண்மையில் அர்ச்சையை வழிபடுபவன் எம்பெருமானின் ஸாந்நித்யத்தை ஒரு நாளும் மறக்கக் கடவனல்லன். அந்தர்யாமியாயும், விபவமாயும், வ்யூஹமாயும், பரவாஸுதேவனாயுமுள்ள அவனே இந்த மூர்த்தி என உணர வேண்டும். இதை மறந்தானேயாகில் இவனுக்கும் கல்லைத் தொழுபவனுக்கும் யாதொரு வித்யாஸமுமில்லை.

**திரு. லா. ஸ்ரீநிவாஸன்,**
புது தில்லி.

‘இராமானுஜ வேதாந்தத்தில் ஆராய்ச்சி’ என்ற புத்தகத்தில் எஸ். ஆர். பட் என்பவர் அர்ச்சையை பகவானே என்று நினைப்பதைக் காட்டிலும் அது பகவானைக் குறிக்கும் அறிகுறி, அடையாளம் என்று நினைப்பதே மேல் என்று பரோபதேசம் செய்ய முற்படுகிறார். ப்ரஹ்ம ஸூத்ரத்தில் (4-3-14) ப்ரதீகோபாஸனை செய்பவர்களுக்கு மோக்ஷம் கிடையாது என்று அறுதியிட்டதை இவர் மறந்தார் போலும்.

**न तस्य प्रतिमाऽस्ति** எம்பெருமானுக்குப் பிரதிமை கிடையாது என்று கூறும் யஜுர் வேத வாக்யத்தை சிலர் உதாஹரிக்கின்றனர். இந்த வாக்யம் பகவானுக்குப் பிரதிமா (உருவம்) கிடையாது என்று கூறுகிறதே தவிர, ப்ரதிமை அல்லது விக்ரஹத்தில் அவன் இல்லை என்று சொல்லவில்லை என்பதை அவர்கள் கவனிக்க வேண்டும்.

**अग्नौ तिष्ठति विप्राणां**
**हृदि तिष्ठति योगिनाम् ।**
**प्रतिमास्वप्रबुद्धानां**
**सर्वत्र समदर्शिनाम् ॥**

என்ற ச்லோகத்தை ஆதாரமாகக் கொண்டு சிலர் விக்ரஹத்தில் தெய்வமுள்ளதாக மந்தமதிகள் நினைக்கிறார்கள் என்று மூன்றாம் பாதத்திற்கு அர்த்தம் கூற முற்படுகின்றனர். ஆனால் ச்லோகம் மற்ற மூன்று பாதங்களிலும் எம்பெருமானுள்ள இடங்களைக் கூறும்போது நடுவில் மட்டும் அதற்கு முரணாகக் கூறாது. ஆகவே உண்மைப் பொருள் என்னவென்றால் ப்ராஹ்மணன், யோகி, ஸமதர்சி போல் இல்லாத மந்த மதிகளுக்குக் கூட விக்ரஹத்தில் எம்பெருமான் உளன் என்பதேயாம்.

**வேத, புராணங்களில் அர்ச்சை :**

ருக்வேதம் (10-12-155) கூறுவதாவது:

**अदो यद्दारु प्लवते सिन्धोः पारे अपूरुषम् ।**
**तदारभस्व दुर्हणो तेन गच्छ परस्तरम् ॥**

‘வெகு தூரத்தில் (பூரிஜகந்நாதத்தில்) கடற்கரையில் ஒரு புருஷனால் நிர்மாணம் செய்யப்படாதயாதொரு மாவுருமான புருஷோத்தம சரீரம் மிதக்கிறதோ, அதை உபாஸிப்பாயாக. ஒருவராலும் வெல்ல முடியாதவனே! அதைக் கொண்டு அக்கரையிலிருக்கும் பரமபதத்தையடைவாயாக.’

சாயணரின் பாஷ்யமும், ஸ்காந்த புராணமும் இது பூரி ஜகந்நாதத்தைக் குறிக்கிறது என்று தெளிவாகக் கூறுகின்றன. இதற்கு முன்னுள்ள ஓர் மந்த்ரம் **अरायि काणे विकटे गिरिं गच्छ** (ருக்வேதம் 10-12-153) என்பது வேங்கடமலையைப் பற்றியது என்று உப ப்ரும்மணம் செய்கிறது பவிஷ்ய புராணம் (4-21). ‘வேதமும் ஸ்ரீ நிவாஸனும்’ என்ற கட்டுரையில் உ. வே. யஜ்ஞவராஹாசாரியார் ஸ்வாமி இது போன்ற வேறு சில வேத வாக்யங்களையும் உதாஹரித்துள்ளார் (திருவல்லிக்கேணி ஸ்ரீ அஹோபில மடம் மலர் 1968. ப. 25-27).

ஸ்ரீமத் பாகவதம் (11-27) அர்ச்சையைத் தொழ வேண்டிய வழியை விரிவாக சிக்ஷிக்கிறது. மேலும் அர்ச்சோபாஸனையையும் கோயில் கைங்கர்யத்தையும் ப்ரசம்ஸிக்கிறது (11-11-34/41). பலராமனின் தீர்த்த யாத்திரை (10-79) அவர் பல கோயில்களைத் தர்சித்ததையும், வேங்கடம், ஸ்ரீரங்கம், காஞ்சி போன்ற முக்ய தென்னிந்திய ஆலயங்களை ஸேவித்ததையும் குறிக்கிறது. அர்ஜுனனின் தீர்த்த யாத்திரையிலும் இதுபோல் பல உள்ளன. மஹாபாரதத்தில் வனபர்வத்தில் தீர்த்த யாத்ரா பர்வத்தில் ஸௌராஷ்டிரத்திலுள்ள கோயில்களும் கோகர்ணமும் குறிக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் **सहपत्न्या विशालाक्ष्या नारायणमुपागमत्** (அயோ. 6-1) என்று இராமன் தனது அபிஷேகத்து முதல்நாள் அகன்ற கண்களையுடைய ஸீதையுடன் நாராயணனை ஸேவித்தார் என்பது ப்ரஸித்தம். தேவாலயங்களைப் பற்றி ஸ்ரீமத் ராமாயணத்திலுள்ள மற்றும் பல தகவல்கள் உ.வே.ஸ்ரீ.டி. ஸ்ரீநிவாஸாசாரியார் ஸ்வாமியால் ‘இராமாயண ஸாராவளி’ஸில் கொடுக்கப்பட்டுள்ளன (பக். 33-35, மூன்றாம் பதிப்பு).

**அர்ச்சையில் ஐந்து குணங்கள் :**

ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரத்தில் உத்தர க்ருத்யாதிகாரத்தில் அர்ச்சையில் ஐந்து குணங்களை முக்யமாக நாம் மனதில் கொள்ள வேண்டுமென்று அருளியுள்ளார். அவற்றை நாம் சிறிது விவரமாகக் காண்போம்.

1. **பூர்ணத்வம்:** ஈசாவாஸ்யோபநிஷத்தின் சாந்தி மந்திரமாக விளங்கும் பின்வரும் சிறந்த வேத வாக்யம் சுக்ல யஜுர் வேதத்தைச் சார்ந்தது.

**पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते ।**
**पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥**

“இங்குத் திரும்பத் திரும்ப வரும் பூர்ண சப்தம் முழுமையையும் பூர்த்தியையும் குறிக்கும். இந்த பூர்த்தி அல்லது முழுமை அநந்தத்தையே கூறுகிறது. அதைவிட உயர்ந்த பூர்த்தியோ முழுமையோ கிடையாதாதலால்” என்று பேராசிரியர் எம். ரங்காசாரியார் தமது ‘கீதை உபந்யாஸங்கள்’ என்ற நூலில் கூறுகிறார். ஆகவே இதன் பொருள்:

‘அது அநந்தம் (முடிவற்றது); இது அநந்தம்; அநந்தம் தன்னைக் காட்டிலும் மேலும் உயர்கிறது; அநந்தத்திலிருந்து அநந்தத்தை எடுத்தால் அநந்தமே அப்போதும் மிகுதியாக உள்ளது.’

ஆதுனிக உயர் கணிதத்தில் இதையே ஆதரிக்கின்றனர். இதை நம்முன்னோரான ரிஷிகள் தங்கள் யோக சக்தியால் அறிந்தனர். இதன் கருத்தை டாக்டர். கே. சி. வரதாச்சாரியார் ‘பக்தியின் விதங்கள்’ என்ற நூலில் இவ்விதம் விளக்குகிறார்:

'ஆகவே பகவான் தனது பரத்வத்தினுல் பூர்ணன், எங்கும் பரவிய ஈச்வரனுகவும் பூர்ணன், இயற்கையில் ஜீவர்களின் அந்தர்யாமியாக இருந்து கொண்டும் பூர்ணன், அவதாரங்களிலும் பூர்ணன். இவையெல்லாவற்றையும் காட்டிலும் அவன் அதிகனுகையால், அந்த மிகுதியிலும் பூர்ணன்.'

ஆயினும், வ்யூஹங்களில் வாஸுதேவனிடம் மட்டும் ஷாட்குண்யம் பூர்ணமாகத் தெரிகிறது. மற்ற வ்யூஹங்களிலும் அவை பூர்ணமாயினும் ஈரிரண்டு குணங்களே வ்யக்தமாகின்றன. விபவங்களில் மத்ஸ்ய கூர்மாதிகளில் இவை வ்யக்தமாவதில்லை. இராமக்ருஷ்ணுயவதாரங்களில் பகவான் மனித பாவனை செய்து தனது உண்மை மேன்மையை மறைக்கவே பார்க்கிறுன். தேவர்கள் இராமனைப் பரந்தாமனென்று போற்ற, அவர் आत्मानं मानुषं मन्ये रामं दशरथात्मजम् । 'நான் என்னை தசரத குமாரனுன இராமனென்ற மானிடனுகவே கருதுகிறேன்' என்ருர். கோபாலர்கள் கண்ணனின் அமானுஷ சேஷ்டிதங்களைக் கண்டு அவரைத் தெய்வமாக மதிக்க, அவரும் 'நான் தெய்வமுமல்ல, கந்தர்வனுமல்ல, யக்ஷனுமல்ல, தானவனுமல்ல, உங்களுக்கு உறவினுகப் பிறந்தவனே' (வி. பு. 5(372) என்று மறுத்தார். ஆகவே அர்ச்சையில்தான் பூர்ணத்வம் வெளியாகிறது. ஏனெனில் அர்ச்சை மனதை நிலை நிறுத்த உதவும் கேவலம் கல், மரம் அல்லது உலோகமல்ல, அது எம்பெருமான் தானேயாம்.

2. பாவனதமத்வம்: சாண்டில்ய ஸ்ம்ருதி (2-89) உரைப்பதாவது:

आपीठान्मौलिपर्यन्तं पश्यतः पुरुषोत्तमम् ।
पातकान्याशु नश्यन्ति किं पुनस्तूपपातकम् ।

'அர்ச்சை வடிவு கொண்ட புருஷோத்தமனைத் திருவடிப் பீடம் முதல் திருமுடி வரை ஸேவிப்பவனுக்குப் பஞ்ச மஹா பாதகங்களும் உடனே அழிந்துபோம். உபபாதகங்கள் நசிப்பதற்குச் சொல்லவும் வேண்டுமோ?'

3. எல்லா மனோ வ்யாதிகளுக்கும் மருந்தாதல்: பௌஷ்கர ஸம்ஹிதை பின்வருமாறு கூறுகிறது.

मद्दर्शनादकस्माच्च पुंसां संमूढचेतसाम् ।
कुवासना कुबुद्धिश्च कुतर्कनिचयश्च यः ॥
कुहेतुश्च कुभावश्च नास्तिकत्वं लयं व्रजेत ॥

'மதிமயக்கமுள்ள மனிதர்கள் அர்ச்சை வடிவு கொண்ட பகவானை தற்செயலாய் ஸேவித்தாலும், கெட்ட வாஸனை, கெட்ட அறிவு, கெட்ட யுக்திகளின் கூட்டம், கெட்ட காரணம், கெட்ட கருத்து, நாஸ்திகத் தன்மை எல்லாம் ஒழிந்துபோம்.'

4. ஸௌலப்யம்: மற்ற அவதாரங்களைக் காட்டிலும் அர்ச்சையின் மேன்மை அதன் ஸௌலப்யத்திலாம். பரரூபம் ஆவரண ஜலம் போலே தூரத்திலுள்ளது; அடைய முடியாதது; வ்யூஹம் க்ஷீராப்தியைப் போலே புராணங்களில் கேட்கப்படுகிறது; தேவர்கள் மட்டும் அணுகக் கூடியது; விபவம் மழைக் கால காட்டாறு வெள்ளம் போன்றது, அந்த ஸமயத்திலுள்ளவர்களுக்கு மட்டும் உபயோகமானது, பின்னுள்ளாருக்குப் பயன்படாது; அந்தர்யாமி பூகத ஜலம் போல் மிகச் சிரமப்பட்டு அடையக் கூடியது, யோகிகளுக்கு அர்ஹமானது; அர்ச்சை ஒன்றே மடுவில் தங்கிய நீர்போல் நமது விடாயை உடனே தணிக்கவல்லது. எம்பெருமான் தனது பேரருளால் ஸ்ரீரங்கம் போன்ற திவ்ய தேசங்களில் நித்ய வாஸம் செய்கிருன் என்று ஸ்ரீபராசர பட்டர் போற்றுகிருர் (ஸ்ரீரங்கராஜ ஸ்தவம் 2-75). பின்னுனோர் வணங்கும் சோதியாகும் அர்ச்சை.

அர்ச்சையின் ஸௌலப்யத்தைப் பிள்ளை உலகாசிரியர் தத்வத்ரயத்தில் இவ்விதம் வரைந்துள்ளார்:

'அர்ச்சாவதாரமாவது — 'தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவம்' என்கிறபடியே, சேதனர்க்கு அபிமதமான த்ரவ்யத்திலே விபவ விசேஷங்கள் போலன்றிக்கே தேசகாலதிகாரி நியமமில்லாதபடி ஸந்நிதி பண்ணி அபராதங்களைக் காணுக் கண்ணிட்டு, 'அர்ச்சகபரதந்த்ரமான ஸமஸ்த வ்யாபாரங்களையும் உடையவனுய்க் கொண்டு, கோயில்களிலும் க்ருஹங்களிலும் எழுந்தருளியிருக்கும் நிலை... ...ஸ்வ ஸ்வாமி பாவத்தை மாறுடிக் கொண்டு அஜ்ஞரைப் போலேயும் அசக்தரைப் போலேயும் அஸ்வதந்த்ரரைப் போலேயும் இருக்கச் செய்தேயும், அபார காருண்ய பரவசனுய்க் கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும்.'

ஸ்ரீ பராசர பட்டர் ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்தில் (2-74) அருளியபடி அர்ச்சையில் எம்பெருமான் அர்ச்சக பராதீனனுக இருந்து கொண்டு பக்தன் செய்யும் தவறுகள் யாவற்றையும் பொறுத்து தன் ஸாந்நித்யத்தால் வழிபடுபவனை வாழ்விக்கிருன். தேச காலாதீனமான பொருள் தன்னைத் தேச காலாதீனமாக ஆக்கிக் கொள்கிறது. இதுவே ஸௌலப்ய காஷ்டை. இதை ஸ்வாமி தேசிகன் ஆச்ரித பாரதந்த்ர்யம் என்று அருள்வர்.

5. லயிக்கச் செய்யும் லாவண்யம்: இந்த்ரிய கோசரமாவதால் சூதனுக் கள்வனுகி தூர்த்தரோடிசைந்தவரையும் தன் அழகினுல் மயக்கித் திருத்திப் பணிகொள்ளும் பெருமை வாய்ந்தது அர்ச்சை. இந்த அம்சத்தில் இது மற்ற அவதாரங்களைக் காட்டிலும் மேம்பட்டது. மற்ற அவதாரங்கள் சுபமாக இருக்கச் செய்தே சுலபமாக ஆச்ரயிக்கத் தக்கவையல்ல. அர்ச்சை யொன்றே சுபாச்ரயமானது, சுபமும் ஸுலபமாக ஆச்ரயிக்கத் தக்கதுமானது. மேலும் அர்ச்சை முமுக்ஷுவுக்குப் பின் கிடைக்கவிருக்கும் பேரானந்தத்தின் முன் சுவை போலுள்ளது. இக்காரணங்களால் ஆழ்வார் ஆசார்யர்கள் அர்ச்சையிலேயே மண்டிக்கிடப்பர், மற்ற அவதாரங்களைவிட இதையே சிறந்ததாக மதிப்பர். திருமங்கை

யாழ்வார் மற்றவர்களைவிட அர்ச்சையில் அதிகம் ஆழ்ந்தவர். நூற்றெட்டு திவ்ய தேசங்களில் பெரும்பாலானவற்றை இவர் பாடியிருப்பதே இதைக் காட்டும்.

அவதார ரஹஸ்யம் :

அவதாரத்தில் மானிடமும் தெய்வமும் ஸந்தித்த போதிலும், ஸாதுக்களே அதன் தெய்வீகத் தன்மையை உணர்வர். பாமரரும் ஆஸுர ப்ரக்ருதிகளும் அவதாரம் எந்த உருவத்திலுள்ளதோ அதுவேவாக அதை மதிப்பர் (வரதராஜ பஞ்சாசத் 11). இந்த அபூர்வ கலப்பினுல் அவதாரமானது ரஹஸ்யமென்று கூறப்படும். ஸ்ரீமத் பாகவதம் (1-3-25) கூறுவதாவது: 'பகவானின் அவதாரங்களும் செயல்களும் வேதங்களால் காக்கப்பட்டுவரும் ரஹஸ்யம்.' அதுமேலும் மொழிவதாவது (1-3-29); 'பகவதவதாரங்களின் கதை ரஹஸ்யமானது. எவன் இதை தினமும் காலையிலும் மாலையிலும் சுத்தமனதுடனும் பக்தியுடனும் நினைக்கிறுனே, அவன் ஸகல துக்கங்களிலிருந்தும் விடுபடுகிறுன்.'

ஆகவே, அவதாரங்களின் உண்மைப் பொருளை சரிவர உணர்வதை அவதார ரஹஸ்ய ஜ்ஞானம் என்று நமது குரவர்கள் போற்றுகின்றனர். அவதார ரஹஸ்ய உண்மையைத் தெளிவாக அறிவதற்கு நாம் பாஷ்யகாரர் அருளிய அர்த்த கர்பமான, புத்தி கூர்மையுடைய கீதா பாஷ்யத்துக்கும் (நான்காம் அத்யாயம்) அதற்கு ஸ்வாமி தேசிகன் ஸாதித்துள்ள ஒப்பற்ற ப்ரகாசிகையான தாத்பர்ய சந்திரிகைக்கும் மிகவும் கடமைப்பட்டுள்ளோம்.

கீதையின் நான்காம் அத்யாயத்தில் ஸ்ரீ க்ருஷ்ணன் தான் கூறிய கர்மயோகம் அர்ஜுனனை யுத்தம் செய்யத் தூண்டும் பொருட்டுப் புதிதாகக் கற்பிக்கப்பட்டதல்ல, அது உண்மையில் தொன்று தொட்டுவரும் புராதன ஜ்ஞானமாகுமென்று உரைக்கிறுர். உலக க்ஷேமத்தின் பொருட்டுத் தாம் அதை முதலில் ஸூர்யனுக்கு உபதேசித்ததாகவும், பிறகு அது மனு முதலானேர் மூலமாக ராஜ ரிஷிகளின் வம்சத்தில் தலைமுறை தலைமுறையாக உபதேசிக்கப்பட்டு வந்தது, பிறகு காலக்ரமத்தில் அனேகமாக க்ஷீண தசையை அடைந்தது. தனது ப்ரிய நண்பனும் சிஷ்யனுமான அர்ஜுனனுக்குத் தான் இப்போது மறுபடியும் அதை உபதேசிப்பதாகக் கூறி முடித்தார் ஸ்ரீக்ருஷ்ணன்.

ஸ்ரீக்ருஷ்ணன் பகவானின் அவதாரம் என்பது அர்ஜுனன் அறியாததல்ல. அவனே அதைக் கூறுகிறுன் (கீதை 10-12, 13). மேலும், பீஷ்மர் முதலானேரிடமிருந்தும் ராஜஸூய யாகத்தில் கண்ணனின் பரத்வத்தைப் பற்றி அவன் கேள்வியுற்றுள்ளான். ஆயினும் அதன் பூர்ண விளக்கம் அவனுக்குக் கிடைக்காததால் அதை அறிய விரும்பி, தன் ஸம காலனினனை க்ருஷ்ணன் உலக ஆரம்பத்தில் இதை எப்படி ஸூர்யனுக்கு உபதேசித்திருக்க முடியுமென்றவாறு பரிப்ரச்னம் பண்ணுகிறுன். ஸர்வஜ்ஞனை க்ருஷ்ணன் அர்ஜுனன் மனதிலுள்ள ஸந்தேஹங்களை அறிந்தவனுகையால் அவற்றைப் போக்கும் வகையில் பதிலளிக்கிறுர். அவருடைய விடைகளிலிருந்தே அர்ஜுனனல் வ்யக்தமாகக் கேட்கப்படாத வினுக்களை நாம் ஊஹிக்கலாம்.

அர்ஜுனனின் ஸந்தேஹங்கள் :

பகவானின் பரத்வத்தை நன்குக உணர்ந்த அர்ஜுனன் அவருடைய அவதாரங்களைப் பற்றி சரிவர அறியவில்லை. எம்பெருமானின் மேன்மையான குணங்களை நோக்கும்போது அவருடைய அவதாரங்களுக்குக் காரணம் ஒன்றும் புரியவில்லை அர்ஜுனனுக்கு 1. பிறப்பு, மூப்பு, இறப்பு ஆகியவற்றிற்கு எதிர்கட்டாயும், தன் பக்தர்களுக்கு அவற்றைப் போக்குபவனுமான எம்பெருமான் இழிவான பிறப்பை எவ்விதம் ஏற்பான்? 2. தன் ஸ்வரூப அனுபவ ஆனந்தத்திலேயே ஆழ்ந்திருக்கும் அனந்தனுக்கு அவதாரத்தினுல் பலன் யாது? 3. அவனை நியமிக்கக் கூடிய வேறெருவனில்லாதபோது ஒருவரும் அவனை அவதரிக்கும்படிக் கட்டாயப்படுத்த முடியாதல்லவா? 4. ஸர்வஜ்ஞனை பகவானுக்கு நன்மை தீமைகள் தெரியாது, ஆகவே அறிவின்மையால் அவதரிக்கிறுன் என்று எப்படி கூற முடியும்? 5. ஸத்யஸங்கல்பனுகையால், வேண்டாததைத் தவிர்க்க முடியாமல் அவதரிக்கிறுன் என்று எவ்விதம் கூற இயலும்? 6. அவாப்த ஸமஸ்தகாமனுகையால், புதியதாக அவதாரத்தில் அடைய வேண்டியது ஒன்றுமில்லையல்லவா? மேலும், பகவான் கர்ம வச்யன் அல்லனே? இவ்விதமான கேள்விகள் அர்ஜுனனின் மனதில் உள்ளன. ஆகவே அவன் அறிய விரும்பின விஷயங்களாவன: 1. பகவானின் அவதாரங்கள் உண்மையா அல்லது கேவலம் இந்த்ரஜாலம் போன்றவையா? 2. உண்மையானுல் அவன் எவ்விதம் அவதரிக்கிறுன்? 3. அவனுடைய திருமேனி எதனுலானது? 3. அவனது அவதாரத்தின் காரணம் யாது? 5. எந்தெந்த ஸமயங்களில் அவதரிக்கிறுன்? 6. அவதார ப்ரயோஜனம் என்ன?

(தொடரும்)





ச்ரயத இதி ஸ்ரீ: என்பதனுல் எம்பெருமானை நாராயணனை எப்போதும் அடைந்திருப்பவள் என்றும்,

ச்ரீயத இதி ஸ்ரீ: என்பதனுல் சேதநரான ஜீவாத்மா அனைவராலும் அடைய (ஆச்ரயிக்க)ப்படுகிறவள் என்றும்,

ச்ருணோதி இதி ஸ்ரீ: என்பதனுல் சேதநர்களால் முறையிடப்படும் குறைகளைக் கேட்கிறவள் என்றும்,

ச்ராவயதி இதி ஸ்ரீ: என்பதால் அக்குறைகளைப் பகவான் கேட்கும்படிச் செய்கிறவள் என்றும்,

ச்ருணாதி இதி ஸ்ரீ: என்பதால் பயனை (மோக்ஷத்தை)ப் பெறத் தடையாகவுள்ள பாவ புண்ணியங்களை ஒழிக்கிறவள் என்றும்

ச்ருணாதி இதி ஸ்ரீ: என்பதால் ஜீவனுக்குப் பரமனிடத்தில் பகையில்லாமையையும் அன்பையும் அதிகமாக்குகிறவள் என்றும்,

# திரு உறையும் திருச்சானூர்

'என் திருமகள்சேர் மார்பனே என்னுமென்னுடையாவியே என்னும்' என்றும், 'த்வமேவ மாதா ச பிதா த்வமேவ த்வமேவ பந்துச்ச குருஸ் த்வமேவ' என்றும் ஆழ்வாரசாரியர்களால் கொண்டாடப்படும் திருமகளின் பெருமை வாயினுல் மொழிவதற்கரிது. ஆயினும் குழந்தையின் மழலைச் சொல் வடிவமற்றிருப்பினும் அக்குழந்தையின் தாய் ஆராக் காதலுடன் அம்மழலைச் சொல்லைக் கேட்க மறுக்க மாட்டாள்; கேட்டு இன்புறுவள். அது போன்று தாயின் பெருமையைச் சொல்ல அருகதையில்லாது போயினும் அவளைப்பற்றி மிகச் சிறிதேனும் சொல்லுவோம் என்று இங்குத் தெரிவிக்கப்படுகிறது.

ஸம்யக் ஸத்யகுணபிவர்ண நமதோ
ப்ரூயு: கதம் தாத்ருசீ |
வாக் வாசஸ்பதி நாபி சக்ய ரசநா
த்வத்ஸத் குணர்ணோ நிதௌ ||

என்னும் ஸ்ரீஸ்தவ ச்லோகத்தால் பிராட்டியின் குணங்கள் கடலினும் பெரிதாதலால் வாக்கிற் சக்ரவர்த்தியான பிருகஸ்பதியினுலும் சொல்ல இயலாது என்பதைத் தெரிவிக்கிறூர் ஆசாரியர்களில் ச்ரேஷ்டரான கூரத்தாழ்வான்.

ஸ்ரீ: என்னும் எழுத்து பிராட்டிக்கே அஸாதாரணமான திருநாமம். பிள்ளை லோகாசாரியர் என்னும் மஹாசாரியரும் முமுக்ஷுப்படி த்வய ப்ரகரணத்தில் 'ஸ்ரீ என்று பெரிய பிராட்டியாருக்குத் திருநாமம்' என்றூரிறே.

ஸ்ரீ: என்னும் எழுத்தின் பொருளை ஆறுவிதமாகப் பகுப்பர் சான்றோர்.

ஆக இவ்விதமாகப் பிராட்டியின் குணப் பெருமைகளை ஸ்ரீ: என்னும் எழுத்தாலேயே விவரித்துள்ளனர் ஆசாரியர்கள். "ஸ்ரீரித்யேவ ச நாம தே பகவதி ப்ரூம: கதம் த்வாம் வயம்" என்கிறூர் பரமாசாரியரான ஆளவந்தாரும். அதாவது லக்ஷ்மீ: என்பது தொடக்கமாக அநேக திருநாமங்களிருப்பினும் ஸ்ரீ: என்னும் திருப்பெயர் தனிப்பெருமை வாய்ந்தது. இதற்கிடான பெயரே இல்லை என்கை.

ஸ்ரீ: என்னும் பிராட்டியார் ஜீவாத்மாவாகிற தன் குழந்தைகளை அணைத்துத் தழுவ, அனைத்துத் திவ்ய தேசங்களிலும் தம் திருப்பெயரை அந்தந்தத் திவ்ய தேசங்களில் வீற்றிருக்கும் எம்பெருமான்களின் திருநாமங்களுக்குத் தக்கவாறு தம் திருநாமத்

திரு. கோ. க. ரங்கராஜன்,
திருப்பதி.



திருச்சானூர் திருக்கோயில்

ளையும் பெற்றுக் கொண்டு கருணை யாகிற தம் பெருங்கடலில் திளைக்கச் செய்கிறாள்.

திருத்தலங்களாகத் திகழும் ஊர் களில் சில தெய்வத்தாலும் மற்றும் சில ஆறு, குளம் முதலான தீர்த்தத் தினாலும் ரிஷி முதலான சான்றோர் களாலும் பெருமை விளங்கப்பெறும். திருப்பதியை அடுத்த திருச்சானூரோ வெனில் மூன்றினாலும் பெருமை யோடு விளங்குகிறது.

'அகலகில்லேனிறையும்' என்ற பிராட்டியார் பிரிந்தபோது (பிராட்டி எம்பெருமானைப் பிரிந்த காரணம் பாத்ம புராணம் க்ஷேத்ர காண்டம் முப்பத்தி நான்காவது அத்தியாயத் தில் விளக்கமாக எடுத்தியம்பப் பட் டுள்ளது. அங்கே கண்டு கொள்க.) மீண்டும் பிராட்டியாரை அடைய பன்னிரண்டாண்டுகள் தவம் புரிய திருவேங்கடவன் ஸ்வர்ண முகரி என் னும் ஆற்றின் கரையில் ஒரு தடா கத்தை ஏற்படுத்தி, வாயு பகவான் மூலமாக பொற்றாமரை மலர்க் கொடி களை தேவ லோகத்திலிருந்து இந்திர னின் அனுமதி பெற்று அத்தாடகத் தில் நட்டார். சூரிய பகவானால் அம் மலர்க்கொடிகளின் மலர்கள் எப் போதும் மலரும்படிச் செய்துவந் தார். தவத்தின் பதின்மூன்றும் ஆண் டில் கார்த்திகை மாதம் உத்திராட நக்ஷத்திரம் கூடிய சுக்கிலபக்ஷ பஞ் சமி திதி, வெள்ளிக் கிழமையன்று அத்தாமரைத் தடாகத்தின் நடுவில் பிராட்டி தோன்றினாள். உயர்ந்த தாமரைகளைக் கொண்டமையால் அத் தடாகத்திற்குப் பத்ம ஸரோவரம் என்ற பெயரைச் சூட்டிப் பின்பு திரு வேங்கடவன் அவளை அடையப் பெற்று, பின் திருவேங்கட மலையைச் சென்றடைந்தார். அவ்வூரை அலர் மேல்மங்காபுரம் என்றும் பலர் இன் றும் அழைத்து வருகின்றனர். அவ் வூரின்கண் சுகமுனிவர் தவம் செய்து மோக்ஷத்தை அடைந்ததன் காரணத் தால் அதற்குத் திருச்சுகனூர் என்று பெயர் வந்தது. இப்போது அது திருச்சானூர் என்றும் சிறுத்தானூர் என்றும் மருவி வழங்கப்பட்டு வரு கிறது.

ஆக, திருச்சானூர் தெய்வத்தினா லும், தீர்த்தத்தினாலும், ரிஷியினாலும் பெருமை பெற்று விளங்குகின்றது என்பதை அறிந்தோம்.

'அகலகில்லேனிறையுமென்று அலர் மேல் மங்கையுறை மார்பா' என்று திருவேங்கடவனை விளிக்கிறார் நம் மாழ்வார். அலர்மேல்மங்கையான 'திரு' எம்பெருமானின் திருமார்பில் உறைந்துள்ள — நிலைபெற்றுள்ள — தன்மையினைப் பெரியவாச்சான் பிள்ளையென்னும் மஹாசாரியர் விசத மாகக் காட்டியுள்ளார். மிகச் சுருக்க மாகக் கருத்தளவில், இங்குக் காண் போம்.

'உறை மார்பா' என்பதால் திரு மாலின் திருமார்பில் 'திரு'—'ஸ்ரீ'— நிலைபெற்றிருக்கை; திருமார்பிற் சேர்ந்த பின்பு தாம் தோன்றிய இட மான பூவும் நெருஞ்சி முள் போலாகி அதை நினையாது நிலைபெற்றிருக்கை; திருமார்புக்குண்டான நெருங்கிய இடம் வேறு எந்த அவயவங்களுக்கு மில்லையாதல்—என்கை.

'மதுப்பாலே இருவர் சேர்த்தியும் நித்யமென்கிறது' என்றும் 'இவள்

பெற்றது; அதில்லாமையாலே இராவணன் முடிந்தான்' என்றும் ரஹஸ்ய ஸ்ரீ ஸூக்தியால் இருவர் சேர்த்தியும் பிராட்டியின் புருஷகாரத்துவமும் இன்றியமையாததென்று உணர்த்தப் படுகிறது.

திருவேங்கடவனின் திருமார்பை விட்டு இமைப்பொழுதும் பிரியாது உறைந்துள்ள அலர்மேல்மங்கைப் பிராட்டியின் திருவுள்ளக் கிடக்கையைப்பற்றி அன்னமாசார்யா என்னும் பக்த சிகாமணி தம் கிருதியில் புலப்படுத்துகின்றார்.

ஈடுகா நீராககு எதுரெதுரு சூசினி
மேட மீதிநுண்டி அலுமேலுமங்க
வாடுமோ முதோ நீ பை வலபு சல்லி
சல்லி
ஆடீநாப்புமு ஸாரெ அலுமேலு மங்க||
மேருகொளி பிலிசினி ப்ரியமுலு
செப்பி செப்பி
மேரமீர நின்னு அலுமேலு மங்க
ஆரிதே ரெனன்னிடானு அலுமேலு
மங்க||

அதாவது 'உப்பரிகை (மேல் மாடி) மீது நின்று கொண்டு உன்னுடைய வரவு எதிர்நோக்கி இருக்கிறுள். பின்னர் உடல் வாட உன்மீது தீராக் காதல் கொண்டு நடனமாடுகின்றுள். உன் திருநாமத்தைப் பெரு வியப்புடன் கூறிக்கொண்டு காதல் நோய் சுட்டெரிக்க திருவேங்கடவனுன உன்னுடன் கூட (சேர) நாள் எண்ணிக் கொண்டிருக்கின்றுள் அலர்மேல் மங்கை' என்பதாகும்.

திரு உறைந்துள்ள திருச்சானூரில் பஞ்சமீ தீர்த்த உத்ஸவம், ஒன்பது, நாட்கள் நடைபெறுவதோடு ஒன்பதாம் திருவிழாவான தீர்த்தவாரி யன்று திருவேங்கடவன் மஞ்சட் காப்பு, சந்தனம், மஞ்சள் செடி, புடவை, மற்றும் பிரஸாதங்களை வைக்கும் ஐதீகத்தை இன்றும் காணலாம். அதாவது பிரஸாதங்களை அனுப்பிவிட்டுக் கோயில் கதவுகளை(த் திருக்காப்பு)ச் சேர்த்து விடுகிறார்கள். திருச்சானூரில் தாயாருக்குத் திருமஞ்சனம் முதலிய உபசாரங்கள் நடைபெற்ற பின்பே அவனுடைய திருவாசல் திறக்கப்படும்.

அவ்வாறு திருவேங்கடவனே மிக்க அன்பு கொண்டு திருவிழா நடத்தி வைப்பதை நாமும் கண்டு அவர்களிருவருடைய கிருபா கடாக்ஷத்தைப் பெறுவோமாக.

ஈசா நாம் ஜகதோஸ்ய வேங்கட
பதேர் விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம்
தத்வக்ஷ: ஸ்தல நித்ய வாஸ ரஸி
காம் தத்க்ஷாந்தி ஸம்வர்த்திநீம் |
பத்மாலங்க்ருத பாணி பல்லவயுகாம்
பத்மாஸநஸ்தாம் ச்ரியம்
வாத்ஸல்யாதி குணோஜ்ஜ்வலாம் பக
வதீம் வந்தே ஜகந் மாதரம்|| ★

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ பத்மாவதித்தாயார் பிரம்மோற்சவம், திருச்சானூர்.

## 27-11-86 முதல் 6-12-86 வரை

**உற்சவ நிகழ்ச்சிகள்**

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 27-11-86 | வியாழன் | —— | சேனுதிபதி உற்சவம், அங்குரார்ப்பணம் |
| 28-11-86 | வெள்ளி | துவஜாரோஹணம், திருச்சி உற்சவம் | சிறிய சேஷவாகனம் |
| 29-11-86 | சனி | டாஞ்ஜான் உற்சவம் | ஹம்ஸ வாகனம் |
| 30-11-86 | ஞாயிறு | ஸிம்ஹ வாகனம் | முத்துப்பந்தல் வாகனம் |
| 1-12-86 | திங்கள் | கல்பவிருக்ஷ வாகனம் | ஸர்வபூபால வாகனம் |
| 2-12-86 | செவ்வாய் | பல்லக்கு உற்சவம் | கஜவாகனம் |
| 3-12-86 | புதன் | ஹனுமந்த வாகனம் (மாலையில் வசந்தோற்சவம்) | கருடோற்சவம் |
| 4-12-86 | வியாழன் | சூர்யப்ரபை வாகனம் | சந்திரப்ரபை வாகனம் |
| 5-12-86 | வெள்ளி | ரதோற்சவம் | குதிரை வாகனம் |
| 6-12-86 | சனி | பல்லக்கு உற்சவம், சக்கரஸ்நானம், தீர்த்தவாரி அவப்பிரதோற்சவம் | துவஜாவரோஹணம் |

# அறிஞருக்குப் பாராட்டு



வடமொழிப் புலமைக்காக இவ்வாண்டு சுதந்திர நாளன்று இந்திய குடியரசுத்தலைவர் விருது திரு. உ. வே. என். எஸ். ராமானுஜ தாதாசாரியார் அவர்களுக்குக் கிடைத்துள்ளதை வரவேற்று ஸம்ஸ்க்ருத உலகம் மகிழ்ச்சியடைகிறது.

திரு. தாதாசாரியார் அவர்கள் வடஆற்காடு மாவட்டம், ஐந்நூறு ஆண்டுகளாக பண்டிதர்கள் வாழ்ந்து வரும் நாவல்பாக்கம் என்ற கிராமத்தில் தன் தந்தையான வேத விற்பன்னரும் நியாய, மீமாம்சா சாஸ்த்ரங்களில் புலமை பெற்ற திரு. கிருஷ்ண ஸ்வாமி தாதாசார்யர் அவர்களிடமும், உத்தமூர் வீரராகவாச்சாரியாரிடமும், அய்யா தேவ நாதாசாரியாரிடமும், மற்ற பண்டிதர்களிடமும், பிறகு திருமலை, திருப்பதி தேவஸ்தான ஸ்ரீவேங்கடேச்வரா ஸம்ஸ்க்ருத கல்லூரியிலும், ஸ்ரீ பெரும்புதூர் வடமொழிக் கல்லூரியிலும் தன் சொந்த கிராமத்திலும் நியாய, மீமாம்ஸா, வியாகரண, வேதாந்த சாஸ்த்ரங்களை நன்கு கற்றுத் தேர்ந்து சிரோமணி பரிக்ஷையில் முதல்வகுப்பில் தேர்ச்சி பெற்று, தங்கப்பதக்கம் முதலான பரிசுகளையும் பெற்றவர்.

"தத்வ சிந்தாமணி" என்ற நூலை அடிப்படையாகக்கொண்டு ஆராய்ச்சி செய்து, காசி ஸம்ஸ்க்ருத பல்கலைக்கழகத்தாரால் "வித்யா வாரிதி" என்ற பட்டமும் பெற்றவர். பிறகு சென்னை கீழ்த்திசை ஓலைச்சுவடி நூல் நிலையத்தில் பண்டிதர் என்ற பதவியையும், அதன்பின் திருப்பதி கேந்திரீய ஸம்ஸ்க்ருத வித்யாபீடத்தில் முறையே ரிஸர்ச் அஸிஸ்டெண்ட், ரீடர் முதலிய பதவிகளை வகித்து பேராசிரியர் என்ற பதவியை ஏழாண்டு காலமாக வகித்து வருகிறார்கள்.

மேலும் இவர் 'ஞாபக ஸங்க்ரஹ விவ்ருதி" "தீபிகா பிரகாசிகா பாலப்ரியா" "பஞ்சலக்ஷணீ கதாதர வ்யாக்யா பாலபோதிநீ" "கோபால ஸஹஸ்ரநாம வ்யாக்யா பகவத்குண ரத்ன பேடிகா" முதலிய பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்கள். மேலும் நியாய சாஸ்த்ரத்தில் "சதுர்தசலக்ஷணீ" "ஸித்தாந்த லக்ஷண" "பக்ஷதா" முதலிய நூல்களுக்கு விரிவுரை எழுதியுள்ளார்கள். அவைகளும் விரைவில் வெளிவர இருக்கின்றன. "தத்வ சிந்தாமணி" என்ற நூலின் இரு பாகங்களும் திருப்பதி கேந்த்ரீய ஸம்ஸ்க்ருத வித்யாபீடத்தின் வெளியீடாக வந்துள்ளன. இன்னும் பற்பல நூல்கள் ஓலைச்சுவடிகளிலிருந்து எடுத்து பிரசுரிப்பதற்கு உதவியாக இருந்திருக்கிறார்கள்.

சென்னை, கீழ்த்திசை நூல் நிலையத்திலிருந்து பல புத்தகங்கள் இவர் உதவியால் வெளியிடப்பட்டுள்ளன. நாற்பது ஆராய்ச்சி கட்டுரைகளுக்கு மேல் எழுதி வெளியிட்டுள்ளார்கள்.

நிற்க ஸ்ரீ காஞ்சீ சங்கராசார்ய ஸ்வாமிகள், ஸ்ரீ அகோபிலமட ஸ்வாமிகள், ஸ்ரீ மந்த்ராலய ராகவேந்த்ரமட ஸ்வாமிகள், ஸ்ரீ சிருங்ககிரிமட ஸ்வாமிகள், ஸ்ரீரங்கம் ஆண்டவன் ஸ்வாமிகள், உடுப்பி பெஜாவர் பண்டாரகேரி ஸ்வாமிகள் முதலியவர்களால் நடத்தப்பட்ட வித்வத் ஸபையில் முக்ய பங்கு ஏற்று ஸ்வாமிகள் அவர்களுடைய ஆசிகளையும், பண்டிதர்களுடைய பாராட்டுதல்களையும், பல பரிசுகளையும் பொன்னுடைகளையும் பெற்றுள்ளார்கள். பண்டித ஸபைகளில் "சாஸ்த்ரத்ஞகர" "தர்கவாசஸ்பதி" "சதுஸ்சாஸ்த்ர பிரவீண" முதலிய பட்டங்களையும் பெற்றுள்ளார்கள்.

இத்தகைய பெரியோரும், அறிஞரும், நீடூழி வாழ்ந்து சாஸ்த்ர பிரசாரம் செய்து கொண்டிருக்க எல்லாம் வல்ல திருவேங்கடமுடையானை இறைஞ்சுகிறோம்.

## கவனிக்கவும்

திருமலையில் குடில்கள், அறைத் தொகுதிகள், தங்குமிடங்கள் கட்டுவதற்கென நன்கொடையாளர்கள் அனுப்பும் தொகையானது செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் எனும் பெயரில் டி. டி. மூலம் அனுப்பப்படல் வேண்டும். கடிதப் போக்குவரத்துக்களை, தி. தி. தே. செயற் பொறியாளர் V என்னும் முகவரியுடன் கொள்ளாது, இனி மேல் தி. தி. தே. செயலாட்சித் தலைவர், அல்லது தலைமை கணக்கு அலுவலர் எனும் முகவரிகளுடன் வைத்துக் கொள்ளவும். ஏனெனின் 'நன்கொடைத் திட்டம்' தற்போது தி. தி. தே. நிதி ஆலோசகர் மற்றும் தலைமை கணக்கு அலுவலர் பொறுப்பில் செயற்பட்டு வருகின்றது.

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

கேள்வி :

இதுவரையில் கூறியபடி அந்தர்யாமித்வமென்பது பரமாத்மாவிற்கே தனிப்பட்ட தன்மையாக இருக்குமாயின், ப்ரஹ்மஸூத்ரம் முதலத்தியாயம் இரண்டாம் பாதம் நான்காமதிகரணமான அந்தர்யாம்யதிகரணம் தொடங்கியது பொருந்தாமற் போய்விடும். ஏனெனில் பரமாத்மாவின் தனித்தன்மையான அந்தர்யாமித்வமானது ஜீவாத்மாவிற்கும் பொதுவான தர்மமாக இருக்க முடியாமையால், காண்வர்கள் மாத்யந்தினர்களென்று இருபிரிவினரான வாஜஸநேயிகளும் (சுக்ல யஜுர்வேதிகள்) ஓதி வருகின்ற 'ய: ப்ருதிவ்யாம் திஷ்ட்டந்' (எவன் பூமியிலிருப்பவனுய்) என்று தொடங்கியுள்ள பல வாக்கியங்களில் கேட்கப்படும் அந்தர்யாமியானவன் ஜீவாத்மாவா அல்லது பரமாத்மாவா என்ற ஸந்தேஹம் வருவதற்கு இடமில்லையாதலால் அதனைத் தீர்ப்பதில் நோக்குள்ள அந்தர்யாம்யதிகரணம் ஆரம்பிக்க வேண்டியதில்லையன்றோ?

அங்கு இங்ஙனேயல்லவா ஸ்ரீ ராமானுஜ பாஷ்யம் அமைந்துள்ளது— "காண்வர்களும் மாத்யந்தினர்களுமாகிய வாஜஸநேயிகள் 'ய: ப்ருதிவ்யாம் திஷ்ட்டந்...... ஆத்மா அந்தர்யாம்யம்ருத:' (எவன் பூமியில் இருப்பவனுய் பூமியின் உள்ளேயும் இருக்கிறனே, எவனை பூமி அறிவதில்லையோ, எவனுக்கு பூமி சரீரமாகிறதோ, எவன் பூமிக்குள் இருந்து கொண்டு அதனை நியமிக்கிறனே இத்தகைய அந்தர்யாமியானவன் உனக்கு அம்ருதனை ஆத்மாவாகிறன்) என்று ஓதுகின்றர்கள். இப்படியே ஜலம் அக்நி அந்தரிக்ஷம் வாயு ஸூர்யன் திக்குகள் சந்த்ரன் நக்ஷத்ரங்கள் ஆகாசம் தமஸ்ஸு தேஜஸ்ஸு முதலியவற்றிலும் இருந்து நியமிக்கின்ற ஒருவனைக் குறிப்பிட்டு இத்தகைய அந்தர்யாமியானவன் உனக்கு அம்ருதனை ஆத்மா என்று உபதேசிக்கப்படுகிறது. மாத்யந்திநர்களின் பாடத்திலோவெனில், 'எவன் எல்லா வுலகங்களிலும் இருப்பவனுய்' என்றும், 'எவன் எல்லா வேதங்களிலும் இருப்பவனுய்' என்றும், 'எவன் எல்லா யாகங்களிலும் இருப்பவனுய்' என்றும் பர்யாயங்கள் அதிகமாகக் காண்கின்றன. (பர்யாயமாவது— தடவை; அதாவது — ஒவ்வொரு பொருளையும் தனித்தனியே குறிப்பிட்டுஅதற்குள் அந்தர்யாமியாயிருப்பவனே உனக்கு ஆத்மா என்று பல வாக்கியங்களால் பல தடவை சொல்லுவதென்றபடி.) மேலும் 'எவன் விஜ்ஞாநத்திலிருப்பவனுய்' என்ற காண்வ பாடத்தின் ஸ்தானத்தில் 'எவன் ஆத்மாவில் இருப்பவனுய்' என்ற பர்யாயம் காண்கிறது. இன்னும் 'இந்த அந்தர்யாமி உனக்கு ஆத்மா' என்ற காண்வ பாடத்திலுள்ள 'இந்த' என்னும் ஏதத் சப்தத்தின் ஸ்தானத்தில், 'அந்த அந்தர்யாமி உனக்கு ஆத்மா என்று அந்த என்னும் தத்சப்தம் காண்கிறது. அங்கு இந்த அந்தர்யாமியானவன் ஜீவாத்மாவா பரமாத்மாவா என்றெரு ஸந்தேஹம் ஏற்படுகிறது. எது பொருந்தும்? ஜீவாத்மா என்பதே பொருந்தும். ஏனெனில்— வாக்ய சேஷத்தில் (முற்கூறிய பர்யாயங்களின் கடைசியாக எஞ்சிய பகுதியில்) 'காண்பவன் கேட்பவன்' என்று கண் காது முதலிய இந்த்ரியங்களாலுண்டாகும் அறிவையுடையவனுகக் கேட்கப்படுவதனுலும், இப்படிக் காண்பவனையே அந்தர்யாமியாக உபதேசிப்பதனுலும், 'இவனைவிடக் காண்பவன் வேறில்லை' என்று வேறேர் காண்பவனை மறுப்பதனுலும் என்க. (இதுவே அங்குள்ள ஸ்ரீராமாநுஜ பாஷ்யப் பகுதி.)

இந்த பாஷ்யத்திலிருந்து—'எவன் பூமியிலிருப்பவனுய்' என்றிது முதலிய வாக்கியங்களில் அந்தர்யாமியாகக் கேட்கப்பட்டவன் ஜீவனு பரமனு என்ற ஸந்தேஹமே கீழ்க் கூறிய அதிகரணம் ஆரம்பிப்பதற்குக் காரணமென்றும், அந்தர்யாமித்வமென்பது ஜீவனுக்கும் பரமனுக்கும் பொதுவான தன்மையென்றும் அறிதல் எளிதேயாம். ஆகையால் அந்தர்யாமித்வம் பரமாத்மாவிற்கே உரிய தனித் தன்மையென்றல் பொருந்தாது—என்பது இங்கு எழுகின்ற கேள்வியாகும்.

---

தமிழாக்கம் :
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி.

---

விடை :

முற்கூறிய அதிகரணம்—அந்தர்யாமி ஜீவனு பரமனு என்ற ஐயத்தைத் தீர்ப்பதற்காக ஆரம்பித்திருந்த போதிலும், சேதந-அசேதந ரூபமான ஸர்வலோகத்திற்கும் அந்தர்யாமியானவன் ஜீவனு பரமனு என்ற ஐயத்தைத் தீர்ப்பதற்காக ஆரம்பிக்கப்படாமையினுல் ஸர்வலோகாந்தர்யாமித்வமானது பரமாத்மாவிற்கேயுரிய தனித்தன்மையென்

பதில் [illegible]யில்லையென்பது அக் கேள்வியின் விடையாகும்.

அந்த அதிகரணம் தொடங்குதற்குக் காரணமான ஸந்தேஹமோவெனில், 'எவன் பூமியிலிருப்பவனாய்' என்று தொடங்கி காண்வ-மாத்யந்தினர்களான வாஜஸநேயிகள் ஓதும் வாக்கியங்களில் கேட்கப்படும் அந்தர்யாமியினிடமே ஜீவாத்மத்வ-பரமாத்வமாகிய இரண்டு தன்மைகளைக் கோடிகளாகக் (ஸந்தேகத்திற்குப் பற்றுக் கோடாகும் விசேஷணங்களாகக்) கொண்டதாகும்; ஸர்வாந்தர்யாமியினிடம் அன்று. ஏனெனில், ஸர்வாந்தர்யாமித்வமென்னும் பரமாத்மத்வத்தையே பயனாக=ஸித்தாந்தமாக இவ்வதிகரணத்தினால் நிச்சயிக்கவேண்டியிருப்பதனால் என்க. அதனாலல்லவா-முற்குறித்த பாஷ்யத்தில் 'இந்த அந்தர்யாமியானவன் ஜீவாத்மாவா அல்லது பரமாத்மாவா என்றொரு ஸந்தேஹம் ஏற்படுகிறது' என்று ஸந்தேஹத்தின் உருவத்தைக் கூறும் சந்தர்ப்பத்தில் இந்த' என்று ஸந்தேஹத்தின் விசேஷ்யத்தைக் குறித்துள்ளமையும் பரமாத்மத்வத்தைக் கோடியாக=ஸந்தேஹத்தின் விசேஷணமாகக் குறித்துள்ளமையும் பொருந்துகின்றன.

இது இங்கு அறியத்தக்கது. (அந்தர்யாமியானவன் ஜீவனா பரமனா என்ற ஸந்தேஹம் உதிக்க இடமுள்ளமையால் இவ்வதிகரணம் தொடங்குவது உசிதமென்பதும், அந்தர்யாமியானவன் ஜீவாத்மாவே என்ற ஆட்சேபமும், அன்றன்று; பரமாத்மாவேதான் என்ற ஸித்தாந்தமுமாகிய இம்மூன்றும் விசதமாக அறியத்தக்கதென்றபடி.) அவை வருமாறு—

**அதிகரணம் தொடங்குவது உசிதம் :**

'எவன் பூமியில் இருப்புவனாய்' என்றிது முதலிய வாக்யங்களில் கூறப்படுகின்ற அந்தர்யாமித்வமானது—தடையில்லாமையால் சேதநாசேதநரூபஸகலலோகாந்தர்யாமித்வமேயாகுமென்றிசைந்தால், அப்போது இங்குக் கூறப்படும் அந்தர்யாமி பரமாத்மாவே ஆவான். ஏனெனில் ஜீவாத்மாவிற்கு பூமி முதலியவற்றில் அந்தர்யாமியாயிருத்தல் எப்படியாவது பொருந்தினாலும் ஜீவாத்மாவினிடத்தில் அந்தர்யாமியாயிருத்தல் பொருந்தாமையால் சேதநாசேதநரூப ஸகலலோகாந்தர்யாமித்வமென்பது அவனிடம் தடைப்படுதலால் என்க. அங்ஙனமல்லாமல்—ஜீவனுக்கு ஸகலாந்தர்யாமித்வரூபமான அந்தர்யாமித்வம் இசைவதில் தடையிருப்பதனால் அந்தர்யாமித்வமென்பது ஜீவாத்மாவைத் தவிர்ந்த பூமி முதலானவற்றில் அந்தர்யாமியாயிருத்தலாகவே முடிவடைகிறது என்றிசைந்தால், அப்போது அப்படிப்பட்ட அந்தர்யாமித்வம் யோக மஹிமை நிறைந்த ஒரு ஜீவாத்மாவினிடம் பொருந்துமாகையால், இங்குக் கூறப்படும் அந்நர்யாமி ஜீவாத்மாவேயாவான். ஆக இங்கு அந்தர்யாமித்வமென்பது ஸகலலோகாந்தர்யாமித்வமா அல்லது ஜீவாத்மாவைத் தவிர்ந்த பூமி முதலியவற்றில் அந்தர்யாமித்வமா என்ற ஸந்தேஹம் காரணமாக, 'எவன் பூமியினிடத்தில்' என்றிது முதலான வாக்யங்களில் அந்தர்யாமியாசக் கேட்கப்படும் விசேஷ்யத்தில் (பொருளில்) ஜீவனா பரப்ரஹ்மமா என்னும் ஸந்தேஹம் உதிக்க இடமுள்ளபடியால் அதைத் தீர்க்க அந்தர்யாம்யதிகரணம் எழுவது தகும்.

**ஆட்சேபம் :**

இங்கு 'யாவனொருவன் பூமியிலிருப்பவனாய்' என்றிது முதலியவற்றில் கேட்கப்படும் அந்தர்யாமித்வமானது சேதநாசேதநரூப ஸகலலோகாந்தர்யாமித்வம் அன்று. ஏனெனில் அந்தர்யாமியாகக் கேட்கப்பட்டவனுக்கே மேல் வாக்ய சேஷத்தில் 'இவனன்றோ பார்ப்பவன் இவனன்றோ கேட்பவன்' என்றிது முதலியவற்றால் கண் காது முதலான இந்த்ரியங்களாலுண்டாகும் ஜ்ஞானமுடைமையாகிற பார்க்குந்தன்மை கேட்குந்தன்மை முதலியவை கேட்கப்படுவதால் அவை ஸர்வாந்தர்யாமியான பரமனிடம் பொருந்தாவாகையால் என்க. இந்த்ரியங்களின் உதவியின்றியே காண்பது கேட்பது முதலியவற்றைச் செய்பவனன்றோ பரமன்.

இதற்குமேல் - பார்க்குந்தன்மை கேட்குந்தன்மை முதலியவற்றை—கண்ணினுதவியால் பார்க்குந்தன்மை காதினுதவியால் கேட்குந்தன்மை முதலியனவாக ஒப்புக்கொள்ளாமல் (வெறுமனே) உருவத்தைக் காணுந்தன்மை ஒலியைக் கேட்குந்தன்மை முதலியனவாகவே கொள்வதனாலும் அவை பரமாத்மாவிலும் பொருந்துவதனாலும் அந்தர்யாமித்வமானது ஸர்வாந்தர்யாமித்வரூபமாகவே இருப்பதில் என்ன தடை என்று கேட்க வேண்டாம். அப்படிக்கொண்டால், 'இவனைவிட வேறொரு பார்ப்பவனுமில்லை கேட்பவனுமில்லை' முதலியவற்றால் வேறொருவனை மறுத்திருப்பது பொருந்தாது போய்விடுமாகையால் என்க. உருவத்தைக் காணுதல் ஒலியைக் கேட்டல் முதலியவை ஜீவனுக்கும் பரமனுக்கும் பொதுவான தன்மைகளல்லவா?

ஆக, பார்க்குந்தன்மை முதலியவற்றைக் கண்ணினுதவி கொண்டு பார்க்குந்தன்மை முதலியவைகளாகவே கொள்ள வேண்டியிருக்கையால், 'ய: ஆத்மநி திஷ்ட்டந்' என்பதை 'எவன் (ஆத்மநி=) தன்னிடத்தில் இருப்பவனாய்' அதாவது பிறரை ஆதாரமாகக் கொள்ளாமல் யோக மஹிமை நிறைந்த தன்னையே ஆதாரமாகக் கொண்டு இருப்பவனாய் என்று அமுக்கியப் பொருளுடையதாகவும், 'அம்ருத:' முதலியவற்றை 'மரணமில்லாதவன்' முதலான முக்கியப் பொருளுடையனவாகக் கொள்ள முடியாமைபற்றி 'மற்றவரைப்போல் விரைவில் மரணமடையாமல் தனது யோக மஹிமையினால் வெகு காலம் ஜீவித்திருப்பவன்' என்றிது முதலான அமுக்கியப் பொருளுடையனவாகவும்

(28-ம் பக்கம் பார்க்க)

புரிது" என்றார் ஔவைப் பிராட்டியார். கடவுளின் தன்மையை உண்மையில் உணர்ந்து உலக வாழ்க்கையை நன்கு நடத்திப் பரத்தில் வீடு பெறும் வகை நமக்கே மிகவும் உரியதாகும்.

இப்பேற்றையடையும்படி வகுத்த மார்க்கங்களுள் இக்காலத்திற்கேற்ப மிகவும் எளிய முறையாக அமைந்தது பக்தி மார்க்கம் என்பதே எல்லாச் சமையத்தாருக்கும் ஒப்ப முடிந்தது.

பகவத் நாமாவை பக்தியுடனும் ஸங்கீத அமைப்புடனும் பூஜித்தால் இறைவனருள் உடனே கிட்டுகிறது குமாரர் ராமபிரும்மம் என்பர்.

ஸங்கீதத்திலும், கல்வியிலும், பகவத் தியானத்திலும் தன் மனைவி சாந்தையுடன் தன் வாழ்நாளைக் கழிக்கலாமென்று நினைத்து, நீர்வளமும், நிலவளமும், இசை வளமும் பொருந்திய திருவாரூரில் தியாகப் பெருமான்கோயில் அருகிலுள்ள புதுத் தெருவில் இல்லறம் நடத்தி வந்தனர். தற்சமயம் இவ்வீடு மகோத்ஸவ கமிட்டியிடம் உள்ளது.

இவர்களது கடைசிப் புதல்வராக, வெகுதான்ய வருஷம் கி. பி. 1759ம் வருஷம் வால்மீகி அம்சம் எனப் போற்றப்பெறும் ஸ்ரீ தியாகராஜ விருப்பம் மேலிட்டு ஸ்ரீ ஸொண்டி வெங்கடரமணதாஸர் என்ற வைணிக வித்வானிடம் காந்தர்வ வேதம் கற்றனர். இச்சந்தர்ப்பத்தில் தியாகராஜர் குடும்பத்துடன் திருவையாறு சென்றார். வித்தையில் இவருக்கு அதிக சிரத்தை. ஆகையால் நாரத பகவான் பிரத்யக்ஷமாகி "ஸ்வரார்ணவம்" என்கிற கிரந்தத்தை சுவாமிகளுக்கு அளித்ததாகப் பெரியோர்களால் சொல்லப் பட்டு வருவது வெளிப்படை.

ஸ்ரீ தியாகராஜர் ஸங்கீத சாகித்யங்களிலும் முதிர்ந்த தேர்ச்சியடைந்து வடமொழியிலும் தெலுங்

# ஸத்குரு ஸ்ரீதியாகராஜ ஸ்வாமிகள்

என்பது பல ஆன்றோர்கள் திவ்ய சரிதையால் தெரிய வரும். இப்படிப்பட்ட பக்தி மார்க்கத்தை இசையுடன் எத்திசையிலும் கீர்த்தனமாக பரப்பவே பல பெரியோர்கள் அவ்வப்போது அவதரித்தனர்.

அவர்களுள், சமர்த்த ராமதாசர் மகாராஷ்டிரத்திலும், புரந்தரதாசர் கர்னாடகத்திலும், தமிழ்நாட்டில் ஆழ்வார்கள் நாயன்மார்களுடன், ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள், முத்துஸ்வாமி தீக்ஷிதர், சியாமா சாஸ்திரிகள் முதலியவர்களும் தோன்றினார்கள். இவர்களைத் தேவ அம்சம் பெற்றவர்களாகவே நாம் கருதி அவர்கள் மார்க்கத்தை இன்றும் கடைப்பிடித்து வருகிறோம்.

நம் தென்னாடு மகமதியர் ஆட்சியில் இருக்கும்போது தஞ்சையை ஆண்டு வந்த மகாராஷ்டிர மன்னன் ஷாஜி என்பவரால் மிகவும் நன்கு மதிக்கப் பெற்ற கிரிராஜகவி என்ற ஒரு தெலுங்கு அந்தணர் வாழ்ந்து ஸ்வாமிகள் அவதரித்தார். இக்குழந்தைக்கு வேத விதிப்படி உபநயனம் செய்வித்தும் சகல சாஸ்திரங்களையும் கற்பித்து வைத்தார். ஸ்வாமிகளோ குருபக்தி, தெய்வ பக்தி, பிதுர்பக்தி முதலியவற்றில் வெகுசிரத்தையோடு நடந்து வந்தார்.

இவருடைய மூத்த சகோதரர் (கலி அம்சமாகிய) ஜப்யேசன், சுவாமிகளின் குணங்களுக்கும், செய்கைகளுக்கும் நேர் மாறாக இருந்து வந்தார். சில நாள் கழித்து தந்தையாகிய ராமபிரும்மம் இப்புதல்வர்களுக்குத் திருமணம் செய்து வைத்து விட்டுத் தனது பூர்வீகச் சொத்தான பூஜா விக்கிரங்களை இளையகுமாரனை சுவாமிகளுக்குக் கொடுத்து விட்டு இவ்வுலகை நீத்தனர். அவர் மனைவியும் அடுத்த ஆண்டில் பரகதி அடைந்தாள்.

---

"சன்மிஷ்டை"

---

கிலும் ஸ்ரீ ராமபிரானது சரித்திரமாகிய ஸ்ரீ ராமாயணத்தை 24 ஆயிரம் கீர்த்தனங்களாகப் பாட எத்தனிக்கும்பொழுது பல இடையூறுகள் வராதிருக்க ஸ்ரீ விக்னேஸ்வரரைத் தியானித்து "கிரிராஜஸுதா" என்னும் க்ருதியைப் பாடினார்.

பிறகு ஸ்ரீராமபிரான் பேரில் "நின்னே பஜன சேயுவாட" என்ற கீர்த்தனத்தை ஆரம்பித்து வைத்துப் பாடினார். பின் "ஜகதா நந்த கரா", "துடுகுகலா", "எந்தரோ மகானுபாவலு", "சாதிஞ்சநே", "கனகனருசிரா" என்கிற பஞ்சரத்தின கீர்த்தனங்களைப் பாடிப் பரவசமடைந்தார்.

கவி சக்ரவர்த்தி கம்பரை "ஸ்ரீ வைஷ்ணவர்" என்று சொல்லுவதைப் போல சுவாமிகளையும் ராம பக்தர் என்று சொல்லுவதுண்டு. தவிர, உமாபதியின் பேரிலும் அழகிய கீர்த்தனங்களைப் பக்தி ரஸம் சொட்டச் சொட்டப் பாடியிருப்பது



ஸ்ரீ வெங்கடரமண ஸ்வாமிகளும், ஸத்குரு ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளும்

குறிப்பிடத்தக்கது. உதாரணமாக "சிவசிவ என ராதா", "சம்போ மகாதேவா" என்ற கீர்த்தனைகளைச் சொல்லலாம்.

பக்தி செய்து முக்தி பெறலாம் என்னும் திட நோக்கத்துடன் ஸதா ஈஸ்வர பக்தி செய்து கொண்டும், கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டும், தங்கள் குடும்ப பூஜா விக்கிரகங்களைப் பூஜித்துக்கொண்டும் தனது தர்ம பத்னியுடன் கிரஹ தர்மத்தை வழுவாது உஞ்சி விருத்தி உபாயத்தால் நடத்திக்கொண்டு ஆனந்தமாகக் காலம் கழித்து வந்தார் நமது ஸ்வாமிகள்.

இப்படியிருக்கையில், ஒருநாள் யோகீஸ்வர வேஷம் கொண்டு தியாகராஜர் முன்வந்து ஒருவர் நின்றார். அவரை சுவாமிகள் பக்தியோடு உபசரித்தார். அவர் "உமக்கு எதில் பிரியம்" என்று கேட்க, "நான் பகவானை நேரில் தெரிசிக்க வேண்டிய உபாயத்தை தேவரீர் கிருபை கூர்ந்து எனக்கு உபதேசிக்க வேண்டும்" என்று பணிவுடன் தெரிவித்தார். வந்த யோகீஸ்வரரும் தன்னுடைய ரூபத்தைக் காண்பித்தபோது ஸ்ரீ தியாகராஜர் அவர் பாதத்தில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி நின்றார்.

பகவான் நாரதஸ்வாமி வெளிப்பட்டு "நீ கொஞ்சநாள் இப்பண்பரந்த மண்ணுலகில் இருக்க வேண்டியிருக்கிறது. நான் உபதேசிக்கிற மந்திரத்தை ஏழு கோடி ஆவர்த்தி ஜபம் செய்து முடிப்பாய்; ஆனால் உனக்கு ஸ்ரீராமபிரான் தரிசனம் கொடுப்பார். அதனால் ஜன்ம நிவர்த்தியும், பூவுலகில் கீர்த்தியும் கிடைக்கும்" என்று கூறி மறைந்தார்.

காலம் கடந்தது. ஒருநாள் தமையனை (கலியாகிய) ஜப்யேசன் தியாகராஜர் பூஜித்து வரும் ஸ்ரீராம விக்ரஹங்களைக் காவேரி ஆற்றில் எறிந்து விட்டான். இதைக் கண்ட தியாகராஜர் மூன்று தினங்களில் அகப்படாவிடில் நான் உயிரை விட்டு விடுவேன் என்று புலம்பிக் கொண்டு வருந்தியபொழுது, அசரீரியானது " நீ காவேரியில் மண்ணைப் பறித்துப் பார்ப்பாயானால் உன்னுடைய விக்ரஹங்கள் அகப்படும்" என்று சொல்லிற்று.

ரஹங்கள் இருப்பதைக் கண்டு சந்தோஷித்து திருமஞ்சனம் முதலான சாந்திகளைச் செய்து பல கீர்த்தனங்களைப் பாடி மகிழ்ந்தார். இப்படியிருக்கையில், ஒருநாள், வெளியே சென்று வீட்டுக்கு வரும்போது, தனது வீட்டுக்குள் தர்ம பத்னி — அன்னை தர்மசம்வர்த்தனியம்மையோடு — (திருவையாறு கோயிலில் குடிகொண்டுள்ள அன்னை) சம்பாஷித்துக்கொண்டு இருக்கையில் திடீரென்று இவர் உள்ளே பிரவேசிக்கவும் தேவியார் மறைந்தருளினர்.

இவர் மனைவியை நோக்கி 'யாருடன் நீ பேசிக் கொண்டிருந்தனை' என்று கேட்க, அந்த அம்மாள் ஒன்றும் பேசாமல் நிற்க ஸ்ரீதேவியின் கருணையை உணர்ந்து உடனே "தாரிணி", "மந்தகமன" என்னும் கீர்த்தனங்களைப் பாடி மகிழ்ந்தார். பிறகு சிலநாள் சென்று அவர் மனைவி பரகதி அடையவே, அப் பிரிவைத் தாங்காது ஸ்ரீ ரகுநாதன் பேரில் சில கீர்த்தனங்களைப் பாடினர்.



ஸ்ரீதியாகப்ரஹ்மத்தின் உருவச்சிலை, ஸமாதியில் உள்ளது.

யாத்திரைக்குப் புறப்பட்டார். திருவையாறிலிருந்து நேராக திருமலை — திருப்பதி சென்று ஸ்ரீ வேங்கடாஜலபதிப்பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு ஆலயத்திற்குச் செல்ல, திரை மூடப்பட்டிருந்ததைப் பார்த்து மிக்க வருந்தி "தெரதீயக ராதா" "ஸ்ரீ வெங்கடேசா" என்னும் பல க்ருதிகளால் துதித்தார்.

பகவான் தரிசனம் கிடைத்தது; மிக்க ஆனந்தமடைந்தார்.

திரும்பி வருகையில் தியாகராஜர் அறியாமல் கோவூர் பிரபல நிலக்கிழார் சுந்தரேச முதலியார், அவர் வழிச் செலவிற்காக ஆயிரம் ரூபாய் பல்லக்கில் வைத்திருந்தார். நேரிடையாக தியாகராஜரிடம் கொடுத்தால், அதை வாங்க அவர் மறுத்து விடுவார் என்ற எண்ணத்தின் பேரில் அவ்வாறு செய்தார். ஆனால், ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் முக்ய சிஷ்யர்களான வாலாஜாபேட்டை ஸ்ரீ வெங்கட்ரமண பாகவதர்,உமையாள்புரம் சகோதரர்களான ஸ்ரீ கிருஷ்ண பாகவதர் அவர் தம்பி ஸுந்தர பாகவதர், இவர்களுடைய பிரதம சிஷ்யர் பெங்களூர் முனிசாமியப்பா இவர்களிடம் அறிவித்து இருந்தார்.

கைத் திருடர்கள் மறித்துக் கொண்டனர். அப்பொழுது தியாகராஜர் ஸ்ரீராமபிரானைத் தியானித்து "முந்து வெனுகா", "ரகுவீர" என்னும் கீர்த்தனங்களைப் பாடினர்; பாடவே இரு வீரர்கள் பல்லக்கின் அருகில் நின்று பாணப் பிரயோகம் செய்யலாயினர். ஆனால், அவ்வீரர்கள் வந்தது தியாகராஜருக்காவது, சிஷ்யர்களுக்காவது தெரியாது.

பின்பு, அத்திருடர்கள் வந்து தியாகராஜரை நோக்கி எங்கள் மீது அம்பு எய்த அந்த இரு புருஷர்களும் எங்கே என்று கேட்டனர். ஸ்வாமிகள் வீரர்களாக வந்தது ராம லக்ஷ்மணர்களாகவே இருக்க வேண்டுமென்று உணர்ந்து 'திருடர்களே! தயவு செய்து அந்த புண்ணிய புருஷர்கள் எங்கே, காட்டுங்கள்?' எனக் கேட்டார்.

ஸ்வாமி, வீரர்கள் நின்றது தங்களுக்குத் தெரியாதா? என்று சொல்லி அவர்களும் திருட்டுத் தொழிலை விட்டு, பல்லக்கைச் சுமந்துகொண்டு வரும் வழியில், ஒரு காட்டின் மார்க்கமாய் ஒரு அக்ரகாரத்தை அடைந்தனர். அங்கிருந்த கோயில் வாயிற்படியில் மக்கள் கூட்டமாய் குழுமியிருந்தனர்.

வென்று விசாரித்ததில் யாத்திரை அந்தணர் ஒருவர் கிணற்றில் விழுந்து இறந்து விட்டார் என்று சொன்னவுடன் ஸ்வாமிகள் மனமிரங்கி இறந்தவனைப் போய் பார்த்தார். அவன் ஹரிதாஸனாய் இருந்ததை உணர்ந்து அவனுக்கு உயிர் தருமாறு "நாஜீவாதார" என்னும் கீர்த்தனையால் ஸ்ரீ ராமபிரானை வேண்ட அவன் உறங்கினவன்போல் எழுந்து ஸ்வாமிகளை நமஸ்கரித்து, விடைபெற்றுச் சென்றான்.

பிறகு, திருவொற்றியூர், சிதம்பரம், நாகப்பட்டினம், சீர்காழி, ஸ்ரீரங்கம் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்து ஆங்காங்கு கோயில் கொண்டுள்ள மூர்த்தங்களைப் பாடி இறுதியில் பஞ்சபூத க்ஷேத்திரமான திருவையாறு அடைந்து வழக்கம் போல் தமது கடமையைச் செய்யலானர்.

ஆயிரக்கணக்கான அநேக கிருதிகளை அமிர்த தாரையாய் வர்ஷித்து, தியாகியாகவும் போகியாகவும், விராகியாகவும் யோகானுபவத்தை யடைந்து, ராமாக்ஞையை சிரமேற்கொண்டு தன் 86-வது வயதில் சந்நியாசத்தை ஸ்வீகரித்து, நிஜ சிஷ்ய



ஸ்ரீ தியாகராஜப்பெருமான் திருக்கோயிலும், கமலாலயமும் — திருவாரூர்.

லாமல் ராம பஜனை செய்து வரும் சமயத்தில் ஸ்வாமிகள் பரமபத மடைவதற்கு முன், ஸ்வாமிகளின் திவ்விய சரீரத்தை எந்த விதமான ஏற்பாடு செய்வதென மிக்க பய பக்தியுடன் முக்ய சீடர்கள் கேட்ட னர்.

அதற்கு ஸ்ரீ குருஸ்வாமிகள் — "என் சரீரத்தை பாவாசாமி அக்ர ஹாரம், காவேரி தீரத்தில், என் கடரமணய்யாவின் சமாதியருகில், துளசி பிருந்தாவன ரூபமாக ஏற் பாடு செய்ய வேண்டுமென்றும், அறு பது வருஷங்கள் ஆன பிறகே, என் சிஷ்ய பரமபாரர்களினால் என் பிரபா வம் பிரகாசிக்கும்" என்றார் ஸ்வாமி கள்.

பின் ஸ்ரீராமபிரானைத் தியா னித்து "பரமாத்ம வெடலேமுச் சட" என்னும் கீர்த்தனத்தைப் புஷ்ய பகுள பஞ்சமி (6th January 1847) தினத்தன்று கபாலத்தின் வழியாக — மின்னற்கொடி போல் ஓர் அற்புத ஆச்சரியத்தை யுண்டாக் கும் அந்தராத்ம ஜோதியை நிஜ பக் தர்களுக்கு ஸ்வரூப தரிச னம் கொடுத்து பௌதிக தேகத்தை விட்டு, கீர்த்தி சரீ ரத்தை பூலோகத்தில் பிரகாசிக் கச் செய்து திவ்ய பதவி அலங் கரித்து விட்டார்.

# இன்னருள் புரிவான்

கண்ணன் என்பான் கார்மேனி யன்னான்,
மண்ணை யுண்டான் மாநிலங் காத்தான்.

கண்ணன் என்பான் குசேலன் நண்பன்,
உண்டு வாழ உயர்பொரு ளீந்தான்.

கோவர்த் தனமெனும் குன்றைக் குடையாய்
ஆவினந் தன்னை அன்பாய்க் காத்தான்.

கம்சனைக் கொன்று கருணை புரிந்தான்,
இம்சை யின்றி இன்னருள் புரிந்தான்.

போர்க்களந் தன்னில் சாரதி யானான்.
பார்க்கினி தாகும் கீதை யுரைத்தான்

கௌரவர் தாமே துகிலுரி காலை
துரௌபதை நல்லாள் மானங் காத்தான்.

கோபியர் கொஞ்சும் கமலக் கண்ணன்
சோபிதம் துலங்கச் செய்வான் திண்ணம்.

ஆதி மூலமென் றானை அலற
பாதிகால் பற்றிய முதலை விட்டது.

தாமரைக் கண்ணன் தண்ணருள் புரிந்தான்
ஆமிப் போதும் அருளே புரிவான்.

காளிங்கன் மீது நடன மாடி
ஆளில் லாமல் அடக்கி வென்றான்.

ஆலிலை மேலே அழகாய்ப் பள்ளியே
மாலவன் கொண்டான் மனமகிழ் வாக.

பகனைக் கொன்று பாரைக் காத்தான்.
இகலை அழித்தே இன்னருள் புரிந்தான்

எருதுகள் ஏழினை அடக்கித் தானே
நறுமலர் மேனி நப்பின்னை கொண்டான்.

யசோதை மைந்தன்! அவன்பேர் கண்ணன்!
விசுவா சங்கொள்; விரும்பினி தருள்வான்.

நம்பி யவனை, நாளும் நினைத்தால்
இம்மெனும் நொடியில் இன்னருள் புரிவான்.

— வெண்பாவூர் பெ. திருஞானம்.

இவருடைய களேபரம், பஞ்சநத க்ஷேத்திரத்தில், காவேரி தீரத்தில் ஸ்ரீஸ்வாமிகளின் ஆக்ஞைப்படி சிஷ் யர்களால் பிருந்தாவன சமாதியாக காட்சியளிக்கிறார். முதலில் பிருந் தாவன சமாதியாக காட்சியளிக் கிறார். முதலில் பிருந்தாவன சமாதி மண்ணால் கட்டப்பட்டிருந்ததை உமையாள்புரம் ஸ்ரீசுந்தர பாக வதர், கிருஷ்ண பாகவதர் இவர் களால் செங்கற்களாலும், கடப் பைக் கற்களாலும் புதுப்பிக்கப்பட் டுள்ளது. இக்கைங்கர்யத்துக்கு அநேக சிஷ்யர்கள் ஈடுபட்டனர் என் பது குறிப்பாகும்.

பிற்காலத்தில் ஸ்வாமிகள் வாக் குப்படியே அறுபது வருஷங்களுக்குப் பின் சமஸ்த வித்வான்களும் கூடி ஆராதனை உத்ஸவத்தை நடத்தி வருகிறார்கள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகும். அச்சமயம் ஏராளமான பக்தர்கள் இங்கு வந்து போகிறார்கள். திருவையாறு ஊரே விழாக்கோலம் காணும். இவ்வுத்ஸ வத்தில் சங்கீத வித்வான்கள், ஹரி கதாகாலக்ஷேபம் செய்கிறவர்கள் தங்களுடைய இனிமையான கானம், பிரவசனம் செய்துவிட்டு ஸ்வாமி களின் அனுக்ரஹத்தைப் பெற்றுப் போவதை இன்றைக்கும் காணு கிறோம்; நாளைக்கும் காணுவோம். இப்படியே பல்லாண்டு நடக்குப்படி பரந்தாமனைப் பிரார்த்திப்போமாக!

*

# திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவ்வுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எந்தவிதமான தர்மமும் சிறந்தது இல்லை. அதிலும் திருவேங்கடவன் குடி கொண்டிருக்கும் திருமலையில் யாத்திரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவ்வகையில் தி.தி. தேவஸ்தானம், திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிக்கும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்" ஒன்றினை செயற்படுத்தியுள்ளது.

## திட்டம் எப்படி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும். தி.தி.தே. அத்தொகைக்கு ஈடான தன் பங்கினைச் செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் வட்டித் தொகையிலிருந்து நாள்தோறும் 400 யாத்திரிகர்களுக்கு உணவு வழங்கப்படும்.
* நன்கொடைகள் யாவும் தனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து பெறப்படும்.
* உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின் பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

## பயன்களும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நன்கொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும், மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.
* எண் 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளர்கள் வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.
* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும் வாசிக்கப்படும்.
* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள் சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள் இத்திட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல். வி. ராமய்யா - சென்னை. ரூ. 10 இலட்சம்
2. திரு. மன்சிங்கா - பம்பாய். ரூ. 20 இலட்சம்
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கத்தா ரூ. 10 இலட்சம்
4. திரு. ஈஸ்வர் பிரஸாத் பொத்தார் - கல்கத்தா. ரூ. 10 இலட்சம்
5. திரு. நாட்டுபையா அம்பானி - ரிலேயன்ஸ் டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரீஸ் - பம்பாய் ரூ. 10 இலட்சம்
6. திரு. பி. எம். கைதான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
7. திரு. ஜலான் — கல்கத்தா — ரூ. 10 இலட்சம்.
8. திரு. எம். ஆர். சாப்ரியா அற நிறுவனம் எண் 1 — பம்பாய் — ரூ. 10 இலட்சம்.
9. திரு. ராம்நாத் கோயங்கா — சேர்மேன், இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகைக் குழு — ரூ. 10 இலட்சம்.

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் முழு விவரங்களுக்கு :

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

செயலாட்சித்தலைவர்.

இசைய வேண்டும். அதனால் இந்த ச்ருதியில் அந்தர்யாமியாகக் கூறப் பட்டவன் ஜீவாத்மாதான் என்பதாக ஆட்சேபம் ஒன்று எழுகின்றது.

ஸித்தாந்தம்:

இந்த ஆட்சேபத்தை மறுப்பதற்காக 'அந்தர்யாமீ - அதிதைவ - அதிலோகாதிஷு தத்தர்மவ்யபதேசாத்' என்னும் ஸூத்ரத்தை வியாஸ பகவான் இயற்றியருளினார். (இங்கு ஸந்தர்ப்பத்துக்குச் சேரும்படி 'பரமாத்மா' என்றொரு சொல்லைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.) அதிதைவ அதிலோகாதிஷு=அதிதைவம் அதிலோகம் முதலான சொற்களை அடையாளமாகத் தம்மிடத்தில் கொண்ட வேத வாக்யங்களில் கேட்கப்படுகிற, அந்தர்யாமீ=அந்தர்யாமியானவன், பரமாத்மா=பரமாத்மா=பரமாத்மாவே; ஏன்? தத்தர்ம வ்யபதேசாத்=அப்பரமாத்மாவின் தருமங்களான=தனித்தன்மைகளான, எல்லாவுலகங்களிலும் எல்லா ப்ராணிகளிலும் எல்லாத் தேவர்களிலும் அந்தர்யாமியாயிருத்தலென்ன (உட்புகுந்து நியமித்தலென்ன), இயற்கையாகவே மரணமில்லாமலிருத்தலென்ன முதலியவைகள் இங்குக் குறிப்பிடப்படுதலால்-என்பது இந்த ஸூத்ரத்தின் பொருள்.

இங்கு 'எவன் பூமியில் இருப்பவனாய்' என்றிது தொடக்கமான வாக்யங்களில் கேட்கப்படுகின்ற அந்தர்யாமித்வமானது சேதநாசேதநரூபமான ஸகலலோகத்திற்கும் அந்தர்யாமியாயிருத்தலேயாகும். ஏனெனில், 'எவன் ஜீவாத்மாவில் இருப்பவனாய்' என்று ஜீவாத்மாவையும் வ்யாப்யமாக — மற்றொருவனால் உள்ளே புகப்பெற்றவனாகக் குறித்துள்ளபடியால் என்க. (ஜீவாத்மா தன்னிடத்திலோ இன்னொரு ஜீவாத்மாவினிடத்திலோ உட்புகுந்திருக்கிறானென்பது எந்நூலிலும் காணப்படாததொன்றல்லவா?) அப்படி இடப் பொருளைக் கொண்ட ஏழாம் வேற்றுமையுருபும், அவ்வாத்மாவில் மற்றொருவன் இருத்தலென்பதையுணர்த்துகின்ற 'இருப்பவனாய்' என்ற சொல்லும் முக்கியப் பொருளுடையனவாக ஆகும். (முன்பு ஆட்சேபத்தில் தெரிவித்தபடி 'ஏவன் ஆத்மாவில் இருப்பவனாய்' என்பதற்கு 'எவன் தன்னிடத்தில் இருப்பவனாய்' என்று ஜீவாத்மாவைப் பற்றியதாகப் பொருள் கூறினால், இடமும் இடத்திலுள்ளவனும் ஒருவனே என்று பொருள்பட்டு அது பொருந்தாமையால் வெகு சிரமப்பட்டு 'தன் மஹிமையில் நிற்பவனாய்' என்று இலக்கணையினால் பொருள் கொள்ள வேண்டியிருந்ததனால் 'ஆத்மாவில்' என்ற ஏழாம் வேற்றுமையும் 'இருப்பவனாய்' என்பதும் முக்கியப் பொருளுடையன அல்லவாகும். ஸித்தாந்தத்தின்படி 'எவன் ஆத்மாவில் இருப்பவனாய்' என்பதற்கு—'எந்த பரமாத்மா ஜீவாத்மாவில் இருப்பவனாய்' என்று பரமாத்மாவைப் பற்றியதாகப் பொருள் கூறினால், இடமான ஜீவனும் அங்கு இருக்கும் பரமனும் வேறு வேறாகையால் 'ஆத்மாவில்' என்பதும் 'இருப்பவனாய்' என்பதும் முக்கியப் பொருளுடையன ஆகும் என்றபடி.) முக்கியப் பொருள் கூற முடிந்த இடத்தில் அமுக்கியப் பொருளைக் கற்பித்தல் தகாததொன்றன்றோ?

அங்ஙனமாயின்—கண்ணினுதவி கொண்டு காணுதலைக் குறிக்கும் த்ரஷ்ட்ருத்வம்=பார்க்குந்தன்மை முதலியவை பரமாத்மாவினிடம் பொருந்தாதே என்ன வேண்டாம். த்ரஷ்ட்ருத்வம் முதலிய சொற்களுக்கு உருவத்தைப் பார்க்குந்தன்மை முதலியவையே உண்மைப் பொருளாகையால் அது பரமாத்மாவிலும் பொருந்துகையால் தடையேதுமில்லாமையால்—என்க. அப்படியிருந்தால்—'பார்ப்பவன் வேறொருவனில்லை' என்று மறுத்தல் பொருந்த வழியில்லையே—பார்க்குமாற்றலுடையவனாயிருக்கையால்—என்று கூறுதலும் தகாது. 'பரமாத்வைப் போல் பார்ப்பவன் வேறொருவனில்லை' என்பதே அதற்குப் பொருளாகையால் என்க. எங்ஙனம் பரயாத்மா தன்னால் நியமிக்கப்படுகின்ற பூமி முதலியவற்றால் பார்க்கப்படாதவனாய்க் கொண்டு அவற்றினுள்ளே புகுந்து நியமிப்பவனாய் அவற்றைப் பார்க்கிறானோ, அங்ஙனம் பரமாத்மாவையும் நியமிப்பவனாய் அவனுக்குள்ளே புகுந்து அவனாலே பார்க்கப்படாதவனாயிருக்கின்ற வேறொரு பார்ப்பவன் இல்லை என்பது அதன் கருத்து.

ஆக—வேறொரு பார்ப்பவன் இல்லை என்று மறுத்தலில் பொருந்தாமை சிறிதுமில்லாமையாலும், 'த்ரஷ்ட்ருத்வம்' முதலியவற்றை உருவத்தைப் பார்க்குந்தன்மை முதலியனவாகச் சொல்லுதல் பொருந்துமாகையாலும், 'ஆத்மாவில் இருப்பவனாய்' என்பது முதலியவற்றிற்கு முக்கியமான பொருளைக் கொள்ளுதலில் தடையில்லையாகையாலும் இங்குச் சொல்லுகிற அந்தர்யாமித்வம் சேதநாசேதநரூபமான ஸகல ஜகத்துக்கும் அந்தர்யாமியாயிருந்தலேயாகும். இதனால் 'அம்ருதத்வம்' முதலிய சொற்களும் இயற்கையாகவே மரணமில்லாமை முதலிய பொருளைக் குறிப்பதன் வாயிலாக முக்கியப் பொருளுடையனவாகும். ஆகையால் இங்குச் சொல்லப்படும் அந்தர்யாமியானவன் பரமாத்மாவே தான் என்பது ஸித்தாந்தமாகத் தேறிற்றுகிறது.

(தொடரும்)





# ஆண்டாள்

— திரு. வி. ராகவன்-பள்ளத்தூர்.

உண்ணாது உறங்காது உடலை வருத்திக் கடுந்தவம் புரிந்து எம்பெருமானைக் காண முயலும் ரிஷிகளைக் காட்டிலும் சம்சாரத்தில் வீழ்ந்துறங்கிக் கிடந்த ஆழ்வார்களுக்கு, எம்பெருமான் தன்னைத் தானே காட்டிக் கொடுத்து மயர்வற மதிநலம் அருளிச் செய்தது ஓர் ஏற்றம்! முன்னம் அவன் உணர்த்த பின் தான் உணர்ந்து உறங்கும் அவனைத் துயிலுணர்த்துகிறார் தொண்டரடிப் பொடியாழ்வார். ஆண்டாளோ வெனில், "உம்பர் கோமானே! உறங்காது எழுந்திராய்", 'செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்', 'உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்' (திருப்பாவை 17, 20, 21) எனவுறங்கும் அவனைத் துயிலெழுப்புகிறாள். முதன் முதலில் வேதத்தைப் பிரமனுக்கு உபதேசித்தான் திருமால். பின்னர் 'பாசி தூர்த்துக்கிடந்த பார்மகட்கு.. ............ திருவரங்கச் செல்வனார் பேசியிருப்பனகள்' (நாச். திரு. 11.8) எனப் பார்மகட்கு உபதேசித்தான். அவ்வாறுபதேசித்த அவனுக்கே 'பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய்' (திருப்பா. 29) என இவள் உபதேசிக்கிறாள்.

பண்டைப் பெருமை வாய்ந்த பாண்டிய நாட்டின் சிறப்புற்று விளங்கும் ஸ்ரீ வில்லிபுத்தூர் என்னும் நகரிலே பெரியாழ்வாருக்கு ஆடிப்பூர நன்னாளிலே அருமைக் குமாரத்தியாக பூமிப் பிராட்டியின் அம்சமாய்த் தோன்றினாள். 'தாழ்வொன்றில்லா மறை தாழ்ந்து தல முழுதுங்கலியே ஆள்கின்ற நாள்' (இராமா. நூற். 16) என துஷ்ட்டர்களால் குறைவொன்றுமில்லாத வேதத்திற்கு மாசு கற்பிக்கப்படும்படியான கலிகாலத்தில் உலகைக் காக்கவும், வேதம் மாசு நீங்கி ஒளிபெறச் செய்யவும் தோன்றினாள். 'வேதமனைத்திற்கும் வித்தானது கோதை தமிழ்' என்னும் வாக்கிலிருந்து இது நன்கு புலப்படுகிறது. யாகசாலை நிர்மாணிக்க

# பாதையில் நேர்ந்த சோதனை

உடையவரின் உற்ற சீடரும், அவர் நியமனப்படி திருமலையில் பூந்தோட்டம் அமைத்து திருமலையப்பனுக்கு நாள்தோறும் புஷ்ப கைங்கர்யம் புரிந்து வருபவருமான அனந்தாழ்வான் என்பவர் ஒரு சமயம் திருமலையிலிருந்து ஸ்ரீரங்கப்பட்டிணத்துக்கருகிலுள்ள தன் பிறந்த கிராமத்துக்குப் புறப்படும்படி நேர்ந்தது. நீண்ட நெடிய பயணமாதலால் சீடர்களுடனும் தேவையான உணவு மூட்டையுடனும் புறப்பட்டார். பயணத்தில் முதல் நாள் பாதையில் ஆறு ஒன்று குறுக்கிட்டது. அசதி திர ஆற்றில் நீராடி விட்டு அமைதியுடன் அநுட்டானங்களை முடித்துவிட்டு ஆற்றின் கரையில் அமர்ந்து அமுது உண்ணச் சோற்று மூட்டையை (ஆவலுடன்) அவிழ்த்தார். மூட்டை முழுவதும் எறும்புகள் முற்றுகை செய்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டார். அமுது அருந்த தடை ஆயிற்றே என்று எண்ணவில்லை. திருமலையில் பிறந்த திவ்ய ஜீவன்களை அப்புனித தலத்திலிருந்து அகற்றும்படி நேர்ந்ததே என்று அகம் நொந்தார். சிறிது நேரத்தில் சிந்தை தெளிந்து அவிழ்த்த மூட்டையை அலங்காமல் மீண்டும் கட்டினார். உடன் வந்திருந்த தன் சீடர்களில் ஒருவனைக் கூப்பிட்டார். அவனிடம் நிலைமையை விளக்கி அம்மூட்டையை மீண்டும் திருமலைக்குத் திரும்பிச் சென்று எறும்புகள் அனைத்தையும் அங்கு மூட்டையை அவிழ்த்து விடுதலை செய்யும்படி அறிவித்தார். மற்ற சீடர்களின் உதவியால்தான் உணவு பிரச்சினையையும் சமாளித்தார். உணவுச் சுமையும் உள்ளச் சுமையும் இன்றி மீண்டும் உற்சாகத்துடன் பயணம் புறப்பட்டார்.

திருக்கோவலூர் — ஆர். சுப்பராவ்.

பூமியை உழுங்கால் ஜனக மஹாராஜனுக்கு சீதை கிடைத்தாற்போல் துளசிச் செடிக்குப் பாத்தியமைக்கும்போது துளசி மண்ணில் இவள் கிடைத்தாள். திருவெள்ளறை என்னும் திருப்பதியிலே பெரிய பிராட்டியான கமல வல்லித் தாயாரே பிரதானம் வகிக்கிருள். திருநரையூர் என்னும் நாச்சியார் கோவிலிலே நப்பின்னைப் பிராட்டியே அரசு செலுத்தும் ஏற்றம் உண்டு. அவ்வாறெரு ஏற்றம் ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு ஏற்படுமாறு அவள் அங்குத் தோன்றினாள்! குழந்தைப் பேறற்ற பெரியாழ்வாருக்குப் பெரும் நிதி கிடைத்தாற்போல் பெரு மகிழ்ச்சியுண்டாயிற்று. கோதை யென்று பெயர்ச் சூட்டி அன்புடன் வளர்த்து வந்தார். கோதையென்னும் சொல் மாலையையும் குறிக்குமாதலால், மாலையான தான் திருமாலை வலிய மாலை சூட்டப்போகிருள் என்பதை சூசகமாக அறிவிப்பது போலாயிற்று! ‘ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகலால் திருமகள்போல் வளர்த்தேன்’ (பெரியாழ். திரு. 3-8-4) எனச் சீரும் சிறப்புமாய்ப் பாலூட்டி வளர்க்கப் பெறும்பொழுதே சிறுகச் சிறுக ஞானத்தையும் ஊட்டிப் பின்னர் பஞ்ச சம்ஸ்காரமும் செய்வித்தார்.

‘அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய்-பிஞ்சாய்ப் பழுத்தாளை’ (உபதேச ரத்ந 24) என மணவாள மாமுனிகள் அருளியவாறு ‘அஞ்சுகுடி’ என்று சிலேடையாக

றும், (2) எம்பெருமானுக்கு என்ன தீங்கு வருமோ என அஞ்சும் குடிகள் என்றும் பொருள் மிளிரும்படியாயிற்று. (1) ஐந்து குடிகள் என்னும்போது 1. கர்ப்ப வாசமின்றித் தோன்றிய பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் ஓர் குடும்பம் 2. திருமழிசையாழ்வார் குடி, (3) நம்மாழ்வார் குடி, (4) குலசேகராழ்வார் குடி, (5) பெரியாழ்வார் குடி ஆகிய இவ்வைந்து குடிகளுக்கும் இவளே சந்ததி யென்றும், (2) இவளுக்குப் பின் தோன்றிய (1) தொண்டரடிப் பொடியாழ்வார், (2) திருப்பாணாழ்வார் (3) திருமங்கையாழ்வார் ஆகிய மூவ ருடன் முன்னவர் எழுவரையும் சேர்த்து ஆகப்பதின்மரும் எம்பெரு மானுக்கு என்ன தீங்குவருமோ என ‘அஞ்சும் குடி’யைச் சேர்ந்தவர்களாய் அவர்களுக்கும் இவளே சந்ததியாய்த் திகழுகிருள்! ‘பதின்மருடைய ஞான மும் ஸ்த்ரீ தனமாக இவள் பக்கலிலே குடிகொண்டது; பத்துப் பேருக்கு ஒரு பெண் பிள்ளையிறே’ என்று ‘ஆய்’ என்னும் ஜகந்யாசார்யர் அருளிச் செய்தது கருத்திற்கொள்ளத் தக்கது. பிறந்தது முதற்கொண்டே கண்ண னிடம் ஆராத காதல் உண்டாயிற்று

நம்மாழ்வார், திருமங்கையாழ் வார் ஆகியோர் பெண்ணுடை போர்த்தி, பராங்குசநாயகியாயும் பரகால நாயகியாகவும் அவனிட ஈடுபட்டுப் பேசினாலும் ‘வண் குருகூ சடகோபன் சொல்’, ‘கையிலங் வேல் கலியன் கண்டுரைத்த’ என் றருளிச் செய்ததில் அவர்களின் ஆண் மையே வெளிப்படுகிறது. ‘கோதை சொன்ன சங்கத் தமிழ் மாலை முப் தும்’ எனப் பெண்ணாய்ப் பிறந் கோதை அருளியதாலே அதி பெண்மை மணக்கிறது. இவ்வா பெண்ணுடை போர்த்திய ஆழ்வா களைக் காட்டிலும் பெண்ணாய் பிறந்த இவள் புருஷோத்தமனை அ பவிக்கும் திறத்தில் அவர்களையு

விஞ்சி நிற்கிறாள்! அறியாக் காலத்திலேயே கடல் வண்ணனாகிய கண்ணனிடத்தில் ஏற்பட்ட காதல் இப்போது கரை புரண்டோடவாரம்பித்தது. தான் கண்ணனுக்கு ஏற்றவளோ என ஐயம் தீர்த்துக் கொள்வதுபோல், தன்னை நன்கு அலங்கரித்துக்கொண்டு, தகப்பனார் வடபெருங்கோவிலுடையானுக்காக வைத்திருந்த மலர் மாலைகளைத் தான் சூட்டிக் கொண்டு கண்ணாடி முன் நின்று அழகு பார்த்துக் கொண்டாள். அவனுக்குத் தான் தக்கவளே எனத் திருப்தியுற்றவள் போல் மாலைகளைக் கழற்றி நலுங்காமல் முன் போலவே பூக்குடலையில் வைத்து விடுவாள். பல நாட்களாக நடைபெறும் இதனை அறியாத பெரியாழ்வாரும் அம்மாலைகளை எம்பெருமானுக்குச் சமர்ப்பித்து வந்தார். ஓர் தினம் கோதை மாலை சூடிக் கண்ணாடி முன்நின்று அழகு பார்த்துக் கொள்ளுவதைப் பார்த்து விட்டார். கோபம்கொண்ட அவர், 'கோதை! என்ன காரியம் செய்தாய்? எம்பெருமானுக்கென வைத்திருந்த மாலையை நீ சூட்டிக் கொள்ளலாமா? இது பெரிய அபசாரமில்லையா? இனி அவ்வாறு செய்யாதே' என நல்வார்த்தைக் கூறி வேதனையோடு துயில் கொள்ளச் சென்று விட்டார்.

பரம ரசிகனான கண்ணன் 'தொடுத்த துழாய் மலர் சூடிக்களைந்தன சூடும் இத்தொண்டர்களோம்' (திருப்பல். 9) என 'நம் தொண்டர்கள் நாம் சூடிக்களைந்த மாலைகளையணிந்து கொண்டு மிக்க இன்பமடைகின்றார்களே! நாமும் நம் தொண்டரணிந்து களைந்த மாலைகளையணிந்து இன்பமடைவோம்' என ஆசைப்பட்டான். "சர்வகந்த:" (மணம் நிறைந்தவன்) எனப் பெருமை யோடிருக்கும் அவனே, கந்தம் கமழும் குழலியான கோதை சூடி வாசமேற்றிக் கொடுத்த அம்மாலைகளைத் தான் இதுவரை அனுபவியாத நறுமணம் கொண்டது போலே மிக்க உகப்போடு அணிந்து கொண்டவனாயிற்றே! 'தந்தை காலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல்" (பெரிய திரு. 8-5-1) எனத் தான் கண்ணனாய்ப் பிறக்கும்போதே தந்தை காலில் இட்டிருந்த விலங்கை முறிந்து விழும்படி செய்தவன் அவள் சூடிக்கொடுத்த மாலையைக் கழற்ற முடியாது விலங்கிட்டுக் கிடப்பவன் போல் வாளாவிருக்கிறான். "நப்பின்னை கொங்கை மேல் வைத்துக் கிடந்த மலர் மார்பா" (திருப்பா. 19) என நப்பின்னைப் பிராட்டியோ மிக்க உகப்போடு இவன் மார்பில் என்றும் கிடக்க, இவளோ அவன் இரு கொங்கைகளையும் தனக்கு அரணாகக் கொண்டு கிடக்கிறான். "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் என்னும் இவைவே முலையாவடிவமைந்த" என்றவாறு திருமாலிருஞ் சோலையிலும், திருவேங்கடமலையிலும் படுகாடு கிடப்பனாயிற்றே! ஆகவே யானையாகிற இவனை தான் சூடிக் கொடுத்த மாலையாகிற சங்கிலியால் தன் கொங்கையாகிற கட்டுத்துறையிலே கட்டும்படி இசைந்து கிடக்கிறான். இவ்வாறு அவள் தன்னை பலாத்காரமாக அனுபவிப்பதற்கு இசையாதிருந்தால் தன் ஆசையான 'சூடிக்கொடுத்த' மாலையின் சுகத்தை நுகர முடியாதே! இதன் உள்ளுறைப் பொருளோவெனில், பரமாத்வான அவனுக்கும் ஜீவாத்மாவாகிய ஜீவர்களுக்கும் உள்ள என்றும் குறையாத அன்பினைப்புலப்படுத்துகிறது என்பதே. ஆகவே, வட பெருங்கோவிலுடையான் ஆழ்வார் கனவில் தோன்றி, "ஆழ்வீர்! இன்று நீர் எமக்கு மாலை கொணராத உம் செயலுக்குக் காரணம் அறிவோம். கோதை சூடிக் கொடுத்த மாலையே மணமிக்கதாய் நமக்கும் உகப்பானது. இனி நீர் அவள் சூடிக்கொடுத்த மாலையையே எமக்குக் கொணர்வீர்' எனச் சொல்லி மறைந்தார். இதனால் இவள் எம்பெருமான் தேவிகள் ஒருவளின் அவதாரமே என நினைந்து 'ஆண்டாள்' என்றும், மாதவனுக்குரிய மாலையை இவள் சூடிக் கொடுத்ததால் 'சூடிக்கொடுத்த நாச்சியார்' என்றும் அன்போடு அழைத்து வந்தார்.

ஒரு கொழு கொம்பிலே சேர்க்க வேண்டும் பருவத்தை எட்டிய ஆண்டாள் இனி அவனைக்கூடாது உயிர் தரிக்க முடியாது தவிக்கிறாள். ஆகவே அவள் வட பெருங்கோயிலுடையானைக் கட்டித் தழுவி இன்பம் நுகர அவனை நெருங்கினாள். அதற்கீடாக அவன் இவளுக்கு முகம் காட்டாதிருக்கவே மனம் நொந்து, முன்னர் யாரேனும் இவனை அனுபவித்தது உண்டோவென ஆராய்ந்தாள். கண்ணனைப் பிரிந்த ஆயர் மங்கைகள் தங்களைக் கண்ணனாகப் பாவித்துக் கொண்டு உயிர் தரித்திருந்தார்கள் என்பதைப் பெரியோர்கள் சொல்லக் கேட்டு, ஸ்ரீ வில்லிபுத்தூரை ஆயர் பாடியாகவும், வட பெருங்கோயிலுடையானைக் கண்ணனாகவும், அவன் கோவிலை நந்தகோபர் மாளிகையாகவும் கொண்டு, அங்குள்ள பெண்கள் யாவரும் இடைப் பெண்களாகவும், தானும் அவர்களில் ஒருவளாகவும் பாவித்துக் கொண்டு 'பாவை நோன்பு' நோற்றாள். 'பாற்கடலுள் பையத்துயின்ற பரமனடி பாடி' (திருப்பா. 2) என பாத யாத்திரை போகுமவர்களுக்கு நாம ஸங்கீர்த்தனம்கட்டுச் சோறுவதுபோலேவாழ்க்கைப் பாதை செவ்வனே நடைபெற பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் பரமனுடைய திருவடியைப் பாடி நாடும் நகரமும் செழிக்க 'ஆழி மழைக்கண்ணா!... தாழாதே சார்ங்க முதைத்தசரமழைபோல் வாழ உலகினில் பெய்திடாய்' (திருப்பாவை. 4) என உலகோர் வாழும்படி மழை பொழிய வேண்டி, 'உனக்கே நாமாட் செய்வோம்' (திருப்பா. 29) என வேறுகருமங்களில் மனம் செல்லாது அவனுக்கே என்றும் அடிமை புரியும்படியான செல்வத்தை அருளும்படியாய்ப் பிரார்த்தித்து அவள் நாவினின்றும் மலர்ந்ததே "திருப்பாவை" என்னும் பிரபந்தம். இராமாநுஜரை 'திருப்பாவை ஜீயர்' என உகந்தழைக்குமாறு செய்தது 'திருப்பாவை'யில்

# அதற்கும் மேலே அவன்!

பூமியைத் திருத்திவண்ணப் பொன்மலர்கள் கண்மலரப்
பூவிதைகள் போடும்வரை மனிதன்! — வானப்
புனல்பொழிந்து வளர்ப்பவன் யார்? இறைவன்!

கடல்மலை மணற்பரப்புக் காணலாம் எனநினைத்துக்
கண்ணிமை திறக்கும்வரை மனிதன்! — காணக்
கதிரொளி விரிப்பவன்யார்? இறைவன்!

வாழ்வினில் இணைந்துஇன்ப வாசலில் சுகங்கள்கண்டு
வனிதையுடல் சேரும்வரை மனிதன்! — அங்கு
வளர்மழலை தருபவன்யார்? இறைவன்!

ஏட்டினை விரித்து நெஞ்சம் எண்ணுகின்ற பாப்புனைய
எழுத்தெடுத்துச் சேர்க்கும்வரை மனிதன்! — கவிதை
இழையோடச் செய்பவன்யார்? இறைவன்!

நாடியோ மிகத்தளர்ந்து நாட்களோ மிகவளர்ந்து
நமனுலகை எண்ணும்வரை மனிதன்! — காற்று
நண்பனைப் பிரிப்பவன்யார்? இறைவன்!

ஆடிஓடிச் செல்வம்தேடி அதுஇதுவாய் வாங்கிஒன்ருய்
அழகுபடச் சேர்க்கும்வரை மனிதன்! — அவை
அனுபவிக்கச் செய்பவன்யார்? இறைவன்!

**கவியாமணி மதிவண்ணன் — சென்னை-63.**

அவருக்கிருந்தமிக்க ஈடுபாடே காரண மாகும்.

கண்ணனோடு கூடிக் கலந்து இன்ப மடைந்ததாகத் தான் கண்ட கனு மெய்யாகவே தனக்குக்கிட்டவேணும் என விரும்பினுள். ஆகவே கண்ணனைத் தன்னோடு சேர்த்து வைக்க வேண்டு மெனக் காமனை வேண்டினுள். குயில் பாஞ்ச சன்னியம் இவற்றைத் தூது விட்டாள். திருமாலிருஞ்சோலை மணுளனையும் தன் மனோரதத்தைப் பூர்த்தி செய்து வைக்குமாறு பிரார்த்தித்தாள். இவ்வனுபவத்தால் மலர்ந்ததே "நாச்சியார் திருமொழி" என்னும் ப்ரபந்தம்.

பருவமடைந்த இவளுக்கேற்ற கணவனைக் காணப் பெருது கவலையுற்ற ஆழ்வார் "கோதை! யாருக்கு நீ வாழ்க்கைப்பட விரும்புகிருய்?' என வினவ, 'மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்' (நாச். திரு. 1-5) என்றவள் 'பெருமாளையே மணந்து கொள்ள விரும்புகிறேன்' என்னும் தன் உறுதியையும் தெரிவிக்கிருள். சுயம்வரத்திலே தன் மணுளனைத் தேர்ந்தெடுப்பதுபோல் நூற்றெட்டு திவ்ய தேசத்து எம்பெருமான்களின் வைபவத்தையும் சீர்மையையும் தன் தகப்பனுரிடமிருந்து தெரிந்து கொண்டு, 'என்னரங்கத்தின்னமுதர் குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில் எழுகமலப் பூவழகர் எம்மானுர்"(நாச். திரு. 11-2) என அரங்கனிடத்தில் தன் மனத்தைப் பறி கொடுத்தாள். கோதைக்குத் தக்க மணுளன் அரங்கனே என உணர்ந்த ஆழ்வார் இனி யாது செய்வது என்னும் சிந்தனையோடு உறக்கம் கொண்டார். கனவிலே அரங்கன் தோன்றி, 'கோதையைக் கூட்டிக் கொண்டு நம் கோவிலுக்கு வாரீர். நாமே அவளைக் கைப்பிடிக்கிருேம்' எனச் சொல்லி மறைந்தார். அரங்கனுல் முன்னமேயே நியமிக்கப்பட்ட கோயில் கைங்கர்யபரர்கள் குடை சாமரம் ஆலவட்டம் இவற்றைத் தாங்கிக் கொண்டு வர, 'ஆண்டாள் வந்தாள்' 'சூடிக் கொடுத்த சுடர்க் கொடி வந்தாள்' 'சுரும்பார் குழற் கோதை வந்தாள்' என்றும் கோஷங்கள் வானளாவ, வாத்யங்கள் முழங்க, ஆழ்வாரும் சிஷ்யனுன வல்லப பாண்டியனும் உடன்வர, ஆண்டாள் மூடு பல்லக்கில் எழுந்தருளியிருக்க திருவரங்கத்தையடைந்தனர்.

உடனிருந்த அனைவரும் அதிசயிக்கும் வண்ணம் ஆண்டாள் அழகிய மணவாளன் முன் சென்று பின் உள்ளே புகுந்து நாகத்தணை மீதேறி அரங்கனையடைந்தாள். என்றும் திருவரங்கன் திருவடி வருடலாம்படி அங்கு மறைந்தாள். அரங்கனே ஆழ்வாரை நோக்கி 'திருப்பாற்கடலரசனைப் போலும், ஜனக மகாராஜனைப் போலும் நீரும் நமக்கு மாமனுராகி விட்டீர். வில்லிபுத்தூருறைவானுக்கே கைங்கர்யம் செய்து கொண்டு வருவீர்' எனத் திருவாய் மலர்ந்தருளினுன்.

**श्रीमत्यै विष्णुचित्तार्य मनोनन्दन हेतवे ।**
**नन्दनन्दन सुन्दर्यै गोदायै नित्य मङ्गलम् ॥**

ஸ்ரீமத்யை விஷ்ணு சித்தார்ய மனோ
நந்தன ஹேதவே |
நந்த நந்தந சுந்தர்யை கோதாயை
நித்திய மங்கலம் ||
*(ஸ்ரீவரவரமுனியருளிய முக்தக மங்கலம்-6)*

விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வாருடைய உகப்புக்குக் காரணமானவளும் (பெரியாழ்வாரோடு உள்ள உறவாகிய) மிக்க செல்வத்தையும் நந்தகுமாரனுக்குத் தகுந்த அழகுள்ளவளுமான கோதைக்கு என்றும் மங்களமாகுக!

# ஆண்டாள் அருளிய அமுதப் பாவை

பூவுலகில் வாழும் மக்கள் சகல நலங்களும் பெற்று வாழ வேண்டு மென்பதற்காகவே முன்னோர் நோன்பு முறையைக் கடைப்பிடிக்க வேண்டு மென வலியுறுத்திச் சொன்னார்கள். நோன்பு என்பது என்ன? அதனை எவ்வாறு கடைப்பிடிக்க வேண்டும்? கடைப்பிடிப்பதால் உண்டாகும் பயன்யாது? என்பதைப் பற்றியெல்லாம் இக்கால கட்டத்தில் மக்கள் சிந்திப்பதில்லை. நோன்பு நோற்காதவர்கள் படும் அல்லல் சொல்லுந்தரமன்று.சொன்னாலும் புரியாதவர்கள்; புரிந்தாலும் திமிர்வாதப் போக்கு. இதன் காரணமாக அல்லலைத்தான் அதிகம் அனுபவிக்கிறார்களே தவிர அருமையான சுகவாழ்வை அடைவதில்லை. திங்கள் தோறும் வரும் நோன்புகளைத் தவறாமல் கடைப்பிடித்து வருகின்றவர்கள் அளவிலா மகிழ்ச்சி பெறுவதோடு வாழ்

திரு. பொ. திருஞானம்,
வெண்பாவூர்.

வில் மேலும் மேலும் முன்னேறிச் செல்கிறார்கள். இவர்களைப் போலவே மற்றவர்களும் முன்னேறிச் செல்ல வேண்டும் என்ற நோக்கிலே 'பாவை நோன்' பினைப்பற்றிச் சில செய்திகள் கூறுகின்றேன்.

**அமுதப்பாவை அருளிய ஆண்டாள்:**

பாவை நோன்பினைத் திருப்பாவையின்மூலம் தெளிவுபடச் சொன்னவர் ஆண்டாள். ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாரால் நந்தவனத்தில் கண்டெடுக்கப்பட்டவர், ஆண்டாள். பெரியாழ்வார் முதலில் வைத்த பெயர் கோதை. சூடிக் கொடுத்த சுடர்க் கொடி என்றும், சூடிக் கொடுத்த நாச்சியார் என்றும், மல்லி நாடு ஆண்ட மடமயில் என்றும் ஆண்டாளுக்கு வேறு பெயர்கள் உண்டு.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியைப் பார்த்து பெரியாழ்வார் வியந்து போனார். 'ஆண்டாளுக்குக் கிடைத்த பரிபக்குவம் நமக்கு வரவில்லையே. இவள் நம்மையும் ஆண்டாள்' என்று மகிழ்ந்தாராம் பெரியாழ்வார். மல்லி என்ற அரசியின் பெயரால் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு 'மல்லி நாடு' என்றும் பெயருண்டு. மல்லி நாட்டை ஆண்டவள் மல்லி ராணி. அவளுடைய மூத்த மகன் வில்லி. இவனால் இப்பகுதியின் சிறப்பானஊருக்கு ஸ்ரீவில்லிபுத்தூர்என்று பெயர் வந்ததாகக் கூறுவர். மல்லி நாட்டிலே தொண்டு செய்து அருளாட்சி செலுத்தி வந்த கோதையை 'மல்லிநாடு ஆண்ட மடமயில்' என்று கொள்வதில் தவறில்லை அல்லவா?

**வளர்ப்புப் பண்ணைகள்:**

திருவேங்கடமும், திருவரங்கமும், திருமாலிருஞ்சோலையும் (அழகர் மலை) வைணவ சமயத்தின் வளர்ப்புப் பண்ணைகளாக உள்ளன என்றால் அதுமிகையாகாது. இப்போது அந்தத் தலங்களோடு ஸ்ரீவில்லிபுத்தூரும் நான்காவது வளர்ப்புப் பண்ணை ஆயிற்று என்பதில் எள்ளளவும் ஐயமின்று. இதற்குக் காரணம் பெரியாழ்வாரும், ஆண்டாளுமே யாவார்கள். நாளும் புகழும் பொலிவும் பெற்று வருதல் கண்கூடு.

**ஆண்டாளின் காலம்:**

ஆண்டாளின் கால நிலையினை ஆராய்கின்றபோது தமிழ் ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. மு. இராகவையங்கார் அவர்கள் கீழ்க்கண்டவாறு கருத்து வெளியிடுகின்றார். 'மார்கழி மாதத்துப் பௌர்ணமியில் விடிவதற்கு முன் சுக்கிரோதயம் நிகழ வேண்டுமென்ற ஒழுங்கே இல்லை. அத்திங்களின் வைகறைகளிலே வெள்ளி எழுவது என்பது ஒரு முறையில்லாமல் உண்டாகக் கூடிய நிகழ்ச்சி. அப்படியிருக்க வெள்ளி ஒரு புறம் உதயமாக மறுபுறம் வியாழம் அஸ்தமித்தது என்று கோதையார் குறிப்பிட்டு உரைத்தாரென்றால் அது அவர் காலத்து நடந்த ஒரு விசேட சம்பவமே தவிர வேறன்று.'

இந்தத் தமிழ் அறிஞர் வான சாஸ்திர அறிஞர்களின் துணை கொண்டு மேலும் ஆராய்கின்றார். பெரியாழ்வார் காலம் எட்டாம் நூற்றாண்டு. இந்த நூற்றாண்டில் எந்தெந்த ஆண்டுகளில் அந்த விசேட நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன என்பதைப் பார்க்கின்ற போது எட்டாம் நூற்றாண்டில் ஒரே தடவையாக 731ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 18ஆம் நாள் அதிகாலை 3-50 முதல் 4-00 வரையுள்ள மணியில் ஆகும் இந்த நிகழ்ச்சி தோற்றம் என முடிவு கட்டுகின்றார். அந்த மார்கழிப் பௌர்ணமியன்று அதிகாலையே திருப்பாவை தோன்றிய சுப காலமாக வேண்டும். நீராடுவதற்குச் சிறிது முன்னதாகவே துயிலுணர்ந்த கோதை தான் கண்ணாரக் கண்ட வான நிலையையே பாடியிருக்கிறார் என திரு. மு. இராகவையங்கார் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. கி. பி. 716ஆம் ஆண்டுத் திருவாடிப் பூரத்தில் ஆண்டாள் தோன்றினார் என்றும், தமது பதினைந்தாம் வயதில் அதாவது கி. பி. 731இல் திருப்பாவையை இயற்றினார் என்றும் கொள்வது பொருத்தமேயாகும். ஆனால் அழகிய மணவாளன் கோதையை அங்கீகரித்த காலத்தே அவருக்கு 15 வயதுக்கு மேல் நடைபெறவில்லை என்ற ஊகத்திற்குச் சான்று கிடைக்கவில்லை.

**திருவரங்கம் செல்லுதல் :**

"திருவரங்கப் பெருமானை மணக்க விரும்புகிறேன்"-கோதை. "அதற்கென்னம்மா, ஏற்பாடு செய்கிறேன். மூடு பல்லக்கில் ஏறிக்கொள். புறப்பட்டுப் போகலாம்" என்ற பெரியாழ்வார் வட பெருங்கோயிலுடையானுக்கு வணக்கம் செய்து விட்டு விடை பெற்றார். பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டு புறப்பட்டார்கள். பல்லக்கு திருவரங்கம் நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. வழியில் போய்க்கொண்டிருக்கும்போது "அப்பா! அப்பா! அரங்கனின் கோபுரம், விமானம் தெரியும்போது எனக்குச் சொல்லுங்கள் அப்பா. கோபுரத்தைக் கண்டதும் கால் நடையாகவே போய் அரங்கனை வணங்க வேண்டும்." என்றாள் கோதை.

"சரிம்மா சொல்கிறேன்"

வழியில் பக்தர்கள் பல்லக்கின் மேல் பூமாரி பொழிவதுபோல் மலர்களைப் பல்லக்கின்மீது சொரிந்தனர்.

"இதோ திருவரங்கக் கோபுரம் தெரிகிறதம்மா! அதோ பார் பொற்சிகரம்" என்றார் பெரியாழ்வார். காவிரியின் தென் கரைக்கு வந்த பிறகு மகள் நடக்கக் கூடாது என்று தான் முன் கூட்டிச் சொல்லவில்லை. கோதை உடனே அரங்கனின் அடி பணிந்து திருமார்பில் அமர்ந்திருக்கின்றாள். அந்த சமயம் பல்லக்கில் பாரமில்லாததை உணர்ந்தனர் பல்லக்குத் தூக்குவோர். இதனைப் பெரியாழ்வாருக்குத் தெரிவித்தனர். உடனே ஆழ்வார் பல்லக்கின் திரையை விலக்கிப் பார்த்தார். மகளைக் காணாது திடுக்கிட்டார். அரங்கனை நோக்கி ஓடுகின்றனர். மார்பில் கோதையைப் பார்த்து மகிழ்ந்தார். "நாடறிய என் பெண்ணை மணந்து கொள்ள வேண்டும். ஸ்ரீ வில்லிபுத்தூரில் என் மகளுடன் அமர்ந்து வணங்குவார்க்கெல்லாம் அருள்புரிதல் வேண்டும்" என்று பெரியாழ்வார் அரங்கனை வேண்டினார். "பங்குனி உத்தரத்தில் வந்து மணம் புரிவோம்" என்ற அரங்கனின் வாக்கு கேட்டு மகிழ்ந்து, மகளை அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.

குறித்தபடி அரங்கன் வராததைக் கண்டு எல்லாரும் பெரியாழ்வாரைப் பார்த்தனர். பெரியாழ்வார் மகளைப் பார்த்தார். அவளோ கருடனைப் பார்த்தாள்! வேண்டினாள். அந்தப் பட்சிராஜன் அரங்கனை அழைத்துக் கொண்டு வந்து விட்டான் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு.

திருப்பாவை இயற்றிய ஆண்டாளைப் பற்றிச் சிறிதளவேனும் வாசகர்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற கருத்திலே அவர்தம் வரலாற்றைச் சுருக்கமாக எடுத்தியம்பினன். இது சாலும் என்று கருதி 'பாவை நோன்பு' பற்றி ஆய்வாம்.

**பாவைப் பாட்டு :**

ஆண்டாள் இயற்றியது திருப்பாவை. வைணவர் போற்றுவது. மாணிக்கவாசகர் இயற்றியது திருவெம்பாவை. சைவர்கள் போற்றுவது. பாவைப் பிரபந்தங்களுக்குத் தமிழ்ப்பாட்டில் ஒரு ஸ்தானம் கொடுக்கப்பட்டுள்ளது என்பதையறியலாம். 'சிறுபான்மை பாவைப் பாட்டும், அம்மானைப் பாட்டும் முதலாயின......' என்று பேராசிரியர் தொல்காப்பியத்தில் பொருளதிகாரச் சூத்திரம் 461க்கு உரையெழுதுகையில் குறிப்பிடுவதைக் காணலாம்.

பாவை நோன்பு குறித்து,

"ஐந்தின் முதலா ஒன்பதின் காறும்
ஐங்கணைக் கிழவனை ஆர்வமொடு
நோற்றலும் (1369)

எனப் பிங்கலந்தை நிகண்டு கூறுவதைக் காணலாம். ஐந்து வயது முதல் ஒன்பது வயது வரையுள்ள பெண்கள் பாவை நோன்பு இருப்பர். பனி நீராடி காதற் கடவுளைக் குறித்து இருக்கும் நோன்பு 'பாவை நோன்' பென கூறுவது பிங்கலந்தையாகும்.

**பாவை நோன்பின் பயன் :**

நல்ல கணவனைப் பெற காதற் கடவுள் அருள் வேண்டும் என்பது உட்பொருளாகும். பாவை நோன்பு வேறு, காமன் நோன்பு வேறு என்பதை ஆண்டாளின் வாக்கிலிருந்து அறிந்து கொள்ளலாம். நாடு செழிக்கவும், நல்ல மழை பெய்யவும் பாவை நோன்பு ஒரு காரணமாகும். இந்தக் குறிக்கோள் காமன் நோன்பில் இல்லை. இதுபற்றிப் பரிபாடல் நவில்கிறது.

நல்ல கணவரைப் பெறுதல், நாடு செழித்தல், நல்வாழ்வு வாழுதல் போன்றவற்றைப் பாவை நோன்பின் உயிர்நிலைப் பொருளாகக் கொள்வது பொருத்தமாகும். நுண் மணலில் சிறுமிகள் விருப்பம்போல் அமைத்து வைத்த பாவைகள் காலப் போக்கில் விரும்பும் கடவுளின் பிரதிமைகள் (பாவைகள்) ஆகிவிட்டன.

பாவை நோன்பைத்தான் மார்கழி நோன்பு என்பர். மார்கழித் திங்களில் பனி நீராடி நோன்பு நோற்பதுதான் பாவை நோன்பு ஆகும். ஆனால் மார்கழி நீராட்டத்தைத் தைந்நீராடல் என சங்க நூல்கள் கூறுகின்றன. ஐங்குறு நூறு, நற்றிணை, பரிபாடல், கலித்தொகை போன்றவற்றிலும் தைந்நீராடல் என்று வருவதைக் காணலாம். ஆண்டாள் குறிப்பிடும் மார்கழி நீராடல் தான் தைந்நீராடல் (சங்க இலக்கியக் குறிப்பு).

பனி நீராடும் விரதம் 'அம்பா ஆடல்' என்று சங்க நூல் பகரும். கன்னியர் தாயைத் துணையாகக் கொண்டு நீராடினர் என நல்லந்துவனர் கூறுவதை வைத்து இது 'அம்பா ஆடல்' எனப் பெயர் பெற்றது. இவ்வாறு உரையாசிரியர் பரிமேலழகர் கருதுகிறார். (அம்பா—அம்மா). இந்த நீராட்டம் ஆதியில் தேவிக்காக நடந்திருக்க வேண்டும் என திரு. இராகவையங்கார் கருதுகிறார். இதற்குச் சான்றாக பாகவதத்

தில் மார்கழி நோன்பு பற்றி வரும் செய்திகளை இவர் எடுத்துக் காட்டுவது நோக்கத் தக்கது.

**பாகவதமும் திருப்பாவையும் :**

ஸ்ரீமத் பாகவதம் தசம ஸ்கந்தம் 22ஆம் அத்தியாயத்தில் மார்கழி நோன்பு பற்றி விவரமாக அறியலாம். கோகுல மகளிர் தேவி விரதத்தை மார்கழித் திங்களில் தொடங்கியதாக பாகவதம் கூறுகிறது. அருணோதயத்தில் மகளிர் எழுந்து நீராடச் சென்றதாகக் குறிப்பிடும் நிகழ்ச்சி பாகவதத்தில் உள்ளது. இதனை 'சிற்றஞ் சிறு காலை' என்ற திருப்பாவைப் பாடல் மூலம் அறியலாம். யமுனா நதியில் நீராடினர் என்கிறது பாகவதம். இதனைத் "தூய பெருநீர் யமுனை" என்று திருப்பாவை கூறுகிறது. ஸ்ரீ வில்லி புத்தூரையே கோகுலமாக்கிக் கொண்டாள் ஆண்டாள். அங்கிருந்த ஒரு நீர் நிலையை 'தூய பெரு நீர் யமுனை'யாகக் கற்பனை செய்து கொண்டாள்.

நீராடிய பின் ஈர மணலில் தேவியின் உருவம் சமைத்தனர். அந்தப் பாவைக்குச் சந்தனம், பூ, தூபம், தளிர், பழம் முதலியவற்றால் வழிபாடு நிகழ்ந்ததாக பாகவதம் பகர்கிறது. இதனை,

"தூயோமாய் வந்து நாம்
தூமலர் தூவித் தொழுது"

எனவரும் திருப்பாவை மூலம் அறியலாம்.

"தேவி! கண்ணபிரானை நாயகனாக அருள்க!" என்று பொருள்படும் மந்திரத்தைக் கூறியதாகப் பாகவதம் கூறுகிறது. திருப்பாவையில் பகவான் திருநாமங்களைப் பாடி பரவுவதாக அறிகிறோம்.

தேவியை ஒரு மாத கால பூசனை செய்து நோன்பை விடாமல் நடத்தினர் என்பது பாகவதம். ஆனால் திருப்பாவையில் 'கண்ணனையே சிந்தனை செய்து வழிபடுகிறார்கள்; கண்ணன் இல்லாமல் வேறு தெய்வமில்லை' என்று அறிகிறோம்.

கோபியர் ஒரு நாள் யமுனையில் நீராட கிழக்கு வெளுக்கு முன்பே தோழிகளின் பெயரைச் சொல்லி அழைக்கின்றனர். திருப்பாவையில் வரும் நிகழ்ச்சி இது. கண்ணன் சரிதங்களைப் போற்றிப் பரவுகின்றனர். கண்ணபிரான் விரத பலம் அளித்துக் காத்தான் என பாகவதம் நவில்கிறது.

**மலையாள நாட்டில் பாவை நோன்பு :**

மலையாள நாட்டில் மார்கழி நீராட்டத்தை திருவாதிரைப் பெருவிழாவாக இளம்பெண்கள் கொண்டாடுகின்றனர். மார்கழி மாதத்தில் பத்து நாட்களிலும் மலையாளப் பெண்மணிகள் நீராடி விழாக் கொண்டாடுகின்றனர் என 'மலையாளமும் அதன் வாசிகளும்'என்ற நூலில் திரு. பணிக்கர் கூறுகிறார்.

**திருப்பாவையின் புகழ் :**

திருப்பாவையின் புகழ் சயாம், ஜாவா, சுமத்ரா முதலிய நாடுகளில் பரவியுள்ளது. 'சயாம் மன்னர் அரசியல் சடங்குகள்' என்ற நூலினை க்வாரிட்ஸ் வேல்ஸ் என்பவர் எழுதியுள்ளார். தமிழ்நாட்டின் பாவைப் பாடல்களை முடி சூட்டு விழா, முக்கியமான சடங்கு போன்றவற்றில் ஓதுவது உண்டு என அந்நூலில் வேல்ஸ் என்ற நூலாசிரியர் குறிப்பிடுகின்றார்.

அன்ன வயற்புதுவை ஆண்டாள்,
அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—
இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள், நற்பாமாலை
பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.
—உய்யக் கொண்டார்.

[அன்னவயற்புதுவை-ஸ்ரீவில்லிபுத்தூர். பல்பதியம்—பல பாசுரங்கள். திருப்பாவையைப் படிக்குமுன், ஆண்டாளின் திருப்பெயரை, நெஞ்சே! நீ நினைப்பாயாக' என்பது பொருளாகும்.]

**அடியவர்க்காக அடியார் :**

ஸ்ரீ வைணவ ஆசாரியர்களில் முதல்வராக விளங்கும் ஸ்ரீ நாதமுனிகளின் சீடர் உய்யக் கொண்டார். அவர் மேலும் பாடுகின்றார்:

'சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே!
தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்!—
நாடி நீ
'வேங்கடவற் கென்னை விதி' யென்ற
இம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு.

[தொல்பாவை — பழமையான பாவை நோன்பை, நாடி—விருப்பம் (கண்ணனை நாடி)என்னை விதி - என்னை உரியவளாக விதிப்பாய், என்ற—மன்மதனை நோக்கி முன்னமே சொன்ன, இம்மாற்றம் — இந்தச் சொல்லை— நாச்சியார் திருமொழியை, நாம் கடவா வண்ணம்—நாம் கடந்து போகாதபடி, நல்கு—அருள் செய்வாய்.]

ஆண்டாளுக்கு இறைவன் மேல் எவ்வளவு காதல் உண்டோ அது போன்று நமக்கும் இறைவன் மேல் அன்பு உண்டாக வேண்டும். அவ்வாறு உண்டாக ஆண்டாள் அருள் புரிய வேண்டும். ஆண்டாளை நோக்கி அடியார்களுக்காக உய்யக் கொண்டார் வேண்டுகோள் விடுக்கின்றார்.

"கோதையே! நீ கண்ணனிடம் விருப்பங்கொண்டு, "மன்மதனே! என்னைத் திருவேங்கடமுடையானுக்கு வாழ்க்கைப்படுத்துவாய்!" என்று சொன்ன இந்தச் சொல்லை நாங்கள் கடந்து போகாதவாறு அருள்புரிக" என்பது பொழிப்புரையாகும். (நாச்சியார் திருமொழியை நன்கு தெரிந்து கொள்ளும்படி கருணைபுரிக' என்றும் பொருள் கொள்ளலாம்.)

**செய்யும் கிரிசைகள் கேளீரோ :**

[திருப்பாவை: 2] (கிரிசைகள்—கிரியைகள்).

# ஏழுமலை வைபவம்

மலை எழில் குடிகொண்ட மாதவனின் தாள் பணிவோம்

(அ-ப)

மலை தாங்கிக் குளிர் காத்த கண்ணனவன்
சிலை உருவில் கலிகாக்கும் ஸ்ரீநிவாசன் (மலை எழில்)

(சரணம்)

அடக்கமுடன் ஆதிசேஷன் அண்ணனிடம்
வரம் கேட்டு நிலைகொண்ட சேஷாசலம் (மலை)

கருடனால் உருப்பெற்ற கருடாசலம்
வேதங்கள் சூழநின்ற வேதாசலம் (மலை)

அஞ்சனை தவம்புரிந்து வரம்பெற்ற அஞ்சனாசலம் (மலை)
அசுரனும் ரிஷபனையும் ஆட்கொண்ட ரிஷபாசலம் (மலை)

நாராயண முனிவருக்கு அருள்தந்த நாராயணாசலம்
அந்தணன் மாதவனின் பழிதீர்த்த வேங்கடாசலம் (மலை)

**விசாகன் — மதுரை.**

பற்றும் கிரியைகள் மூன்று:

1. பரமன் அடி பாடுதல்.
2. காலை நீராடுதல்.
3. ஐயமும் பிச்சையும் கை காட்டுதல்.

விடும் கிரியைகள் நான்கு:

1. நெய், பால் உண்ணாமை.
2. மையாலும், மலராலும் அலங்காரம் செய்து கொள்ளாமை.
3. செய்யாதன செய்யாமலிருப்பது.
4. கோள் சொல்லாமல் இருப்பது.

பற்றும் கிரியைகளுடன் விடும் கிரியைகளும் சேர்த்து இப்பாடலில், "செய்யும் கிரியைகள்" என்று உணர்த்தப் பெறுகின்றன.

பாவை பாடுமின்! பரமனருள் பெறுமின்!

வங்கக் கடல்கடைந்த மாதவனைக்
கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார்
சென்றிறைஞ்சி
அங்கப் பிறைகொண்ட ஆற்றைஅணி
புதுவைப்
பைங்கமலத் தண் தெரியல் பட்டர்
பிரான் கோதை—சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு
மால் வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத்
திருமாலால்
எங்கும் திருவருள் பெற்றி இன்
புறுவர்—எம்பாவாய்.

இப்பாடல் ஆண்டாள் பெயரைத் தெரிவிப்பதால் இதனைத் திருநாமப் பாட்டென்பர். பாவை படிப்போர் பரமனருள் பெற்று இன்புறுவர் என்பது கருத்து.

ஆண்டாள் அருளிய அமுதப் பாவை :

வில்லிபுத்தூரின் சிறப்பு :

வயிற்றுப் பசிக்கு உணவளிக்கும் விவசாயியையும் இதயப் பசிக்கு உணவளிக்கும் அறிவாளியையும் ஒருங்கே போற்றுபவர் கார்லைல் என்ற பேரறிஞர். மூன்றுந்தர நபர்களை நான் மதிப்பதில்லை என்கிறார். கார்லைல் போற்றும் தொழிலாளிகள் இருவரும் வில்லிபுத்தூரில் வாழ்ந்தார்கள். பாண்டி நாட்டுக்கு ஒரு நல்லணி எனில் அது மிகையன்று.

கோதை பிறந்த ஊர், கோவிந்தன்
வாழுமூர்,
சோதி மணிமாடம் தோன்றுமூர்—
நீதியார்
நல்ல பத்தர் வாழுமூர், நான்
மறைகள் ஓதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்.

ஆண்டாள் தோன்றிய வில்லிபுத்தூர் எத்துணைச் சிறப்பு வாய்ந்தது என்பதற்கு மேற்கண்ட பாடலொன்றே சான்று கூறும்.

சங்கத் தமிழ் மாலை முப்பதும் தப்பாமே போற்றி வருபவர் எங்கும் திருவருள் பெற்றி இன்புறுவர்.

பாதகங்கள் தீர்க்கும் பரமன் அடி
காட்டும்
வேதம் அனைத்துக்கும் வித்தாகும்—
கோதை தமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத
மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு.

25+5=30ஐ அறியாமலிருந்தால் எவ்வளவு வம்பு வரும். முப்பதை அறிந்திருந்தால் எவ்வளவு சுகம் கிட்டும் என்பதைத் தான் அவ்வாறு குறிப்பிட்டுள்ளனர். உள்ளம் பண்பட உவகையுற வேறு வழி கிடையாது. கண்ணன், ஸ்ரீராமநாமம் உச்சரித்தாலே உன்னைப் பிடித்த பீடையெலாம் பறந்தே போகும்.

திருவடிப் பூரத்துச் செகத்துதித்தாள்
வாழியே
திருப்பாவை முப்பதும் செப்பினாள்
வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்
பிள்ளை வாழியே
பெரும்புதூர் மாமுனிக்குப் பின்னா
னாள் வாழியே
ஒரு நூற்று நாற்பத்தொரு மூன்
றுரைத்தாள் வாழியே
உயரரங்கற் கேகண்ணி உகந்தளித்
தாள் வாழியே
மருவாரும் திருமல்லிவளநாடி
வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்
பதங்கள் வாழியே.

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் —18

பகுதி — 3

ஏதான்யபி து கர்மாணி
ஸங்கம் த்யக்த்வா பலானி ச |
கர்ததவ்யானீதி மே பார்த்த
நிஸ்சிதம் மத முத்தமம் ‖ (18-6)

'அர்ஜுனு! பற்றுதலேயும் பலனே யும் விட்டுவிட்டு இந்தக் கர்மங்கள் செய்யப்பட வேண்டும் என்பது எனது உறுதியான மேலான கொள்கை யாகும்!'

இந்த சுலோகம் முன்பு பன்முறை உரைக்கப்பட்ட கர்மயோகத்தின் சாரத்தை எடுத்துரைக்கிறது. குற் றமோ குறையோ கர்மத்தில் இல்லே, வினேப் பலனே எதிர்பார்த்தலிலும் அதில் பற்று வைப்பதிலும்தான் குற்றம் உள்ளது என்பது ஈண்டு வலி யுறுத்தப்படுகிறது.

ஏதானி அபி: இவைகளும்கூட. இவைகளும் என்பது யக்ஞம், தானம், தபம் ஆகியவற்றைக் குறிக்கின்றன. 'கூட' என்பது மற்ற நிஷ்காம்ய கர்மங்களேப் போல என்பதைக் குறிக் கிறது.

தாய் ஒருத்தி தன் குழந்தையின் நலத்தை நாடித்தான் பத்தியம் இருக்கிருள். உணவையும் உறக்கத் தையும் தவிர்க்கிருள். தன் உடலில் பாலே உண்டு பண்ணிக் குழந்தைக்குக் கொடுக்கிருள். இது ஒரு உயரிய தியாகச் செயலாகும். இதைப் போலவே, பசுவும் தன் உடலில் பாலே உண்டு பண்ணி உலகோர் நலனுக் காக அளிக்கிறது. சுயநலம் கருதாத செயல்களுக்கு இவை எடுத்துக் காட்டு ஆகின்றன. 'யான்' 'எனது' என்ற எண்ணங்களுடன் செயல்களேச் செய்கின்ற போதுதான் அவை செய் பவனேப் பந்தத்திற்குள்ளாக்குகின் றன. மாருக சுயநலம் சிறிதும் இல் லாது, வினேப்பயனில் பற்று வையாது பிறர் நலத்துக்காகவே செய்யப்படும் செயல்கள் முக்திக்கு வழி கோலு பவையாக அமைகின்றன. பயன் கருதாது வினே புரியுங்கால் மனதி லுள்ள ராஜஸிக, தாமஸிக இயல்பு கள் இல்லாதாகி, மனம் சத்வ குணத் தால் நிரப்பப் பெறுகிறது.

'ஸங்கம் த்யக்த்வா பலானி ச' - பற்று தலேயும், பலன்களேயும் விடுத்து பற்று தலிலிருந்துதான் ஆசையே எழு கிறது. தெரு வழியாகச் செல்லுகை யில் கண்களில் எத்தனே எத்தனேயோ பொருள்கள் படுகின்றன. எல்லா வற்றிலுமா நமக்கு ஆசை ஏற்படு கிறது? இல்லேயே, ஏதாவது ஒரு குறிப்பிட்ட பொருள் அல்லது நப ரைப் பார்த்ததும் அவரிடம் முதலில் 'பற்றுதல்' ஏற்படுகிறது. பிறகு அது ஆசையாக மாறுகிறது. எனவே முதலில் விட வேண்டியது பற்றினேத் தான். அடுத்து வினேப்பலனில் உள்ள பற்றுதலேயும் விட வேண்டும். வினேப்பலனே விடுவது எப்படி? 'செய் வதனேத்தும் க்ருஷ்ணர்ப்பணம்' - என்று செய்துவிடுதல் பலனே அவன் பால் விடுவதாகும்.

பற்றுதலேயும் பயனேயும் விட்டவர் கள் இம்மையிலும் மறுமையிலும் மேன்மை அடைகின்றனர். இம்மை யில் அவர்கள் மனம் அமைதியாக இருக்கும். தொடர்ந்தாலும் அவர் கள் நிலேகுலேயாத மனத்துடன் அதை அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள். வினேப்பலனில் பற்று இன்மை காரண மாக மறுபிறவி அற்ற பெருநிலேயை யும் அவர்கள் அடைகின்றனர்.

'இது எனது உறுதியான கொள்கை' என்று பகவான் கூறுவதால் யக்ஞ, தான, தவம் போன்ற செயல்களே நம் போன்றவர் முடிந்த அளவு செய்யக் கடமைப்பட்டிருக்கிறேம் என்பது தெளிவாகிறது.

தானியத்தை முளேக்காதிருக்க என்ன செய்ய வேண்டும்? அதை வறுத்துவிட்டால் போதும். அது போல கர்மங்களின் வினேப் பலனே உண்டாக்கும் ஆற்றலே, வினேப்பலனே எதிர்பார்க்கும் ஆசையை விட்டுவிடு வதால் முறியடித்துவிடலாம்.

எத்தகைய கருமங்களே விடலா காது என்பது அடுத்த சுலோகத்தில் கூறப்படுகிறது.

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

நியதஸ்ய து ஸன்யாஸ:
கர்மணோ நோபபத்யதே |
மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்
தாமஸ: பரிகீர்த்தித: ‖ (18-7)

மேலும் நித்திய கர்மத்தை விடு வது பொருந்தாது. அறியாமையால் அதைத் துறப்பது தாமஸம் என்று உரைக்கப்படுகிறது.

உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் நாம் மட்டுமல்லாது புல், பூண்டு முத லான தாவரங்கள் கூட ஓயாது வினே யாற்றிக் கொண்டிருக்கின்றன. விழிப்பு நிலேயிலும், உறக்க நிலே யிலும், கனவு நிலேயிலும் யாண்டும் ஓயாது நிகழ்ச்சிகள் நிகழ்ந்து கொண் டேயிருக்கின்றன. பிரம்மச்சாரி முதல் ஸன்யாஸி வரை, அரசன் முதல் ஆண்டி வரை அனேவரும்

செயல்புரியக் கடமைப் பட்டிருக்கின்றனர். இயற்கையில் எங்கு நோக்கினும் வினையாற்றலைக் காணலாம். அணுவினுள் உள்ள எலக்ட்ரான் அணுக்கருவைச் சுற்றுகிறது. அதே போல கற்பனைக் கெட்டாத எண்ணிக்கையிலுள்ள நட்சத்திரங்களும் ஓயாது வேகமாகச் சுழன்றுகொண்டேயிருக்கின்றன. சுழற்சி, வேகம் இடைவிடாத வினை-இவையே இயற்கையின் நியதிகள்.

ஏற்கனவே நாம் முந்திய அத்யாயங்களில் பார்த்தது போல நாம் செய்யும் கர்மங்கள் பல வகைப்படும் நித்திய கர்மம், நைமித்திக கர்மம், நிஷித்த கர்மம் என்ற பல்வகைக் கர்மங்களில் நாம் கட்டாயம் செய்தே ஆக வேண்டிய செயல்கள் நித்திய கர்மங்கள் எனப்படுகின்றன. உறங்குதல், உண்ணுதல், குளித்தல் போன்ற செயல்கள் யாவும் இதன்பால் அடங்கும். இவற்றை விடுவது பொருந்தாது. மனிதராகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் இயற்கையாக எந்தெந்தச் செயல்கள் வந்து வாய்த்துள்ளனவோ அவற்றை விடுவது என்பது கூடாது, இயலாது.

மரத்தில் பழுத்த பழங்கள் தாமாக உதிர்ந்துவிடும். அதற்காகப் பூத்துக் காய்த்துப் பழமாக்குவது என்பது மரத்தின் நித்திய கர்மமாகும். அந்த இயற்கையான செயலை விரைவு படுத்த வேண்டும் என்று எண்ணும் ஒருவன் மரத்திலிருந்து காய் நிலையிலேயே அவற்றைப் பிடுங்குகிறான். அது இயற்கையின் நியதிக்கு முரணானதாகும். அத்தகைய காய்கள் கனிவதற்குப் பதிலாக வெம்பிப் போகும். அதில் சுவையிருக்காது. அதில் உள்ள விதைகளும் முளைக்கப் போடுவதற்குத் தகுதியாக மாட்டா. அறியாமையினாலும், அவசரத்தினாலும், ஆத்திரத்தினாலும் செய்த கருமத் தியாகத்தின் விளைவு அது.

நித்திய கர்மத்தை கிரமமாகச் செய்வதனால் மனம் பண்பட வாய்ப்புண்டு. உடலில் உயிர் இருக்கும் வரையில் நித்திய கர்மத்தை ஒழுங்காகச் செய்ய வேண்டும். ஏனெனில் உடல் வாழ்வும் நித்திய கர்மங்களும் பிரிக்க முடியாதவையாகும். அறியாமையாலும், அவிவேகத்தாலும் நித்திய கர்மத்தை விட்டால் கேடு தான் விளையும். செல்வந்தன் வேலை எதுவும் செய்யாமல் சோபாவில் இருந்து கொண்டு அதிகாரம் செய்வதைக் கண்ட கூலியாள் தானும் அவனைப் போலச் செய்யத் தலைப்பட்டால் அவன் கதி என்ன ஆகும்? இத்தகைய நித்திய கர்மத் தியாகம் தமோ குணத்திலிருந்து உதிப்பதாகும்.

துஃகமித்யேவ யத் கர்ம
காயக்லேச பயாத் த்யஜேத் |
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம்
நைவ த்யாகபலம் லபேத் || (18-8)

'உடல் வருத்தத்திற்கு அஞ்சி, கர்மத்தைத் துக்கமெனக் கருதி அதை விடுகிறவன் ராஜஸ தியாகம் செய்பவனாகிறான். அதனால் அவன் தியாகத்தின் பலனும் மோட்சத்தை அடைவதே இல்லை.'

உலகில் வாழும் ஒவ்வொரு உயிரினமும் ஏதாவது ஒரு வகையில் இன்னல்களுக்கும் இடுக்கண்களுக்கும் ஆளாகிக் கொண்டேயிருக்கிறது. வாழ்வு என்றால் எறும்பு இனம் முதல் மனித இனம் வரை போட்டிக்கும் போராட்டத்திற்கும் உட்பட்டேயாக வேண்டும். "எதற்காக இந்த வீண் உடலுழைப்பு? பேசாமலிருந்து கொண்டு பிறர் தரும் சோற்றைத் தின்று வாழ்ந்தாலென்ன?" என்று எண்ணும் பேசாம்பேறிச் சன்யாசி வுக்குத் தகுந்தவன் அல்ல. மாறாக உண்மையான சன்யாசிகள் பலர், சுவாமி விவேகானந்தரைப் போல் ஊண் உறக்கத்தை விடுத்து, மக்கள் குல மேம்பாட்டிற்காக உழைப்பதில் இன்பம் கண்டனர். கல்வி கற்பதற்காகப் பள்ளிக்கூடம் சென்ற மாணவன், படிப்பு கஷ்டமாயிருக்கிறது என்பதால் பாதியில் பள்ளியை விட்டு வெளி வந்தால் அதைத் தியாகம் என்று கூற முடியுமா? அதற்குப் பயங்கொள்ளித்தனம் என்று பெயர். அரை குறை அறிவுடன் ஒருவன் செய்யும் 'கர்மத் தியாகம்' மேலும் பல சிக்கல்களை உண்டாக்கும். பரிபூரணம் பெற்ற ஒருவன் செய்யும் 'கர்மத் தியாகம்'தான் மோட்சத் வழிவகுக்கும். அதுதான் தியாக பலன் எனப்படுகிறது.

அதர்ம யுத்தம் பண்ணத் தலைப்பட்ட கௌரவர்களுடன் நேரிய முறையில் யுத்தம் பண்ண வீராப்புடன் வந்த அர்ஜுனன் திடீர் மயக்கத்தால், பந்த பாசத்தால் 'இந்த யுத்தம் வேண்டாம்' என்று கூறுகிறான். இது தகாது. அறப்போர் செய்தல் அவனது நித்திய கர்மமாகிறது. நெறி வழுவா மன்னவனுக்கு மற்ற எதையும் விட அறமே பெரியது. அறப்போரை அவன் புறக்கணிக்க முனைந்தது ரஜோ குணத்திலிருந்து உதித்த தியாகமாகும். அது அவனுக்கு நற்கதியை அளிக்காது.

(தொடரும்)

## பிள்ளையார் பிடிக்க....!

நீங்களின் பெண்ணுக்கோ அல்லது பிள்ளைக்கோ வரன்தேடிப் போகிறவர்கள் முதலில் விநாயகரை வணங்கி, தங்கள் முயற்சியைத் தொடங்குவார்கள். அப்படித்தான் தொடங்க வேண்டும்.

காரியம் நல்லபடியாக முடிந்தபின் ஆஞ்சனேயருக்கு வடைமாலை சாத்திப் பூஜிப்பார்கள். பூஜிக்க வேண்டும்.

இப்படி எல்லாக் காரியங்களும் சுபமாக முடிய விநாயகரும், ஆஞ்சனேயரும் துணையிருப்பதுதான் சிறப்பு. இவர்கள் துணையிருப்பதால்தான் இந்தப் பழமொழியே வந்தது.

திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.

# திருமகள் வசிப்பதெங்கே?

ஸகலரும் தியானித்து நமஸ் கரிக்கக் கூடிய ஸ்ரீக்ருஷ்ண பகவானை எவனொருவன் மதியாமல் திக்காரஞ் செய்கிறானோ அவனிடம் லக்ஷ்மி வாசம் செய்கிறதில்லை. அவன் பேரில் கோபமடைந்து அவனைவிட்டு விலகி விடுகிறாள். பகவான் தேவர்களைப் பார்த்துக் கூறுகிறார்:

"ஓ தேவர்களே நானோ பக்த பரா தீனனாகையினால் எவனொருவன் என்னுடைய அடியார்களை துவேஷித்துக் கொள்கிறானோ, அவர்களுக்கு உபத்திரவம் செய்கிறானோ, அவர்களைத் தூஷிக்கிறானோ, அவன் இல்லத்தில் பிராட்டி ஸஹிதம் நான் நிச்சயமாய் வாசம் செய்கிறதில்லை. எந்த இடத்தில் சங்கம், திருத்துழாய் இவைகளுடன் ஸாளக்ராமத்தை திருவாராதனம் செய்யவில்லையோ, அடியார்களை வரவேற்று உபசரிப்பதில்லையோ, அதிதி சத்காரமும் இல்லையோ அங்கேயும் பிராட்டி வாசம் செய்கிறதில்லை. என் அடியார்களையும், என்னையும் எவர்கள் நிந்தனை செய்து கொண்டிருக்கிறார்களோ அவர்களிடத்தில் பிராட்டி மகா கோபத்துடன் அந்த இடத்தைவிட்டுப் போய் விடுகிறாள்.

எவனொருவன் அறிவில்லாமல் ஏகாதசியிலும், என் பிறந்த தினத்திலும் போஜனம் செய்கிறானோ, அங்கேயும் வாசம் செய்கிறதில்லை. எவனொருவன் பெண்ணை விற்கிறானோ, அதிதி சத்காரம் முதலியவை செய்யாமலிருக்கிறானோ, அவன் இல்லத்திலும் பிராட்டி நிச்சயமாய் வாசம் செய்கிறதில்லை. நம்பிக்கைத் துரோகி, சிநேகிதனை வஞ்சிக்கிறவன், கொலை புரிபவன், நன்றியறியாதவன், அனுபவிக்கக் கூடாத ஸ்திரீகளை போகிக்கின்றவன், இந்த தோஷங்கள் இருக்கிற இடத்திலும் பிராட்டி வாசம் செய்கிறதில்லை.

மனஸ்சுத்தி இல்லாதவன், குரூரன், பிறரையிம்ஸிக்கிறவன், பிராணிகளை வதைக்கிறவன், வியபசாரியின் மகன் இவர்களுடைய இல்லத்திலும் பிராட்டி வசிக்கிறதில்லை. வியபசாரியின் மகனாகிய பிராம்மணன், கணவனிருக்க மாற்றானை நாடும் ஸ்திரீயினுடைய அன்னத்தைச் சாப்பிடுகிறவன் இவர்களிடத்தில் தங்காமல் உலக மாதாவாகிய பிராட்டி போய்விடுகிறாள்.

பற்களை நகங்களால் கீறுகிறதும், அவைகளால் பூமியில் வரைகிறதும், கபடம், அழுக்கு வஸ்திரம் தரிப்பவன் இப்பேர்ப்பட்டவன் இல்லத்திலும் பிராட்டி வசிப்பதில்லை. பகலில் நினைத்தபடி போஜனம், பகலில் நித்திரை, பகலில் ஸ்திரி ஸங்கம், சதாசாரமில்லாமலிருத்தல், பகவத் பக்தி இல்லாதவன், நனைந்த காலுடன் படுக்கிறவன், எப்பொழுதும் தர்மத்தை மீறிப் பேசுகிறவன், எப்பொழுதும் தன்னவயவங்களில் தாளம்போட்டுக் கொண்டிருப்பவன், விரதம், உபவாசம் முதலியவைகளை அனுசரிக்காதவன், சந்தியாவந்தனம் முதலியவைகளைச் செய்யாத கர்ம பிர்ஷ்டனான பிராம்மணன், பாகவதா சார்ய பக்தி இல்லாதவன், மகான்களை நிந்திக்கிறவன், எப்பொழுதும் அவர்களை வெறுக்கிறவன், அவர்களை இம்சிக்கிறவன், இரக்கமில்லாதவன் இப்பேர்ப்பட்டவர்களிடமும் பெரிய பிராட்டி வாசம் செய்கிறதில்லை.

இன்னும் எவன் குரு, தேவதை, தாய், தந்தை, பந்துக்கள், அதிதிகள், பித்ருக்கள் முதலிய இவர்களுடைய கோபத்திற்குப் பாத்திரமாகிறானோ அவனிடமும், பொய் சொல்கிறவன், சோம்பேறியாய் எப்பொழுதும் வீண் காலம் கழிப்பவன், துஷ்ட குணங்களோடு கூடியவன், உண்மையை மறந்தவன், நம்பிக் கொடுக்கிற பொருளை அபகரிக்கிறவன், பொய் சாக்ஷி சொல்கிறவன், எந்த நேரத்திலும் வீண் கவலையையுடையவன், சதா பயத்தையடைந்தவன், அனேகரிடம் பகை செய்து கொண்டவன், அதிகமாய்ப் பாபகாரியத்திலேயே புத்தியையுடையவன், அதிக கடனாளியாயுள்ளவன், அதிக லோபி இப்பேர்ப்பட்டவர்களிடமும், அவர்கள் வாசஞ்செய்கிற இடத்திலும் பெரிய பிராட்டி வசிக்கிறதில்லை. தவிரவும் சதா காலமும் துர்வார்த்தையைப் பேசுகிறதும், கலகமும், பகவத் ஆராதனம், ஸ்தோத்திரம், சுபமான வார்த்தைகளில்லாமலிருக்கிற இல்லத்திலும் நிச்சயமாய் பிராட்டி வசிப்பதில்லை. உடனே வெளியேறி விடுகிறாள்.

கன்னிகை, அன்னம், வேத மந்திரங்கள், இவைகளை விற்கும் பிராம்மணன் இல்லத்தை நரகத்திற்கு சமானமாக மதித்து, ஒரு பொழுதும் லக்ஷ்மீ அந்த இல்லத்தில் வசிக்கிறதில்லை. எவன் தாயார், தகப்பனார், குருபத்தினி, குருபுத்திரி, குரு, திக்கற்ற சகோதர சகோதரி, கன்னிகை, திக்கற்ற பந்துக்கள், இவர்களை ரக்ஷிக்காமலும், அன்பில்லாமலும், லோபமுடையவனாய்ப் பணமே பெரிதென எண்ணிப் பணத்தைச் சேகரிக்கிறானோ அவன் வீட்டிலும் நிச்சய

ஸ்ரீ. கோ. க. வா. கோவிந்தராஜு
பாவனாசார்யா ஸ்வாமி,
ஸ்ரீரங்கம்.

# துரியோதனன் போட்ட கணக்கு!

இந்துக்களின் காலண்டர் முறையில் சுமார் 33 மாதங்களுக்கு ஒருமுறை 'அதிக மாசம்' ஒன்று வருகிறது. இந்த அதிக மாசம் பாரதக் கதையில் ஒரு பிரச்சினையை ஏற்படுத்தக் காரணமாகி விட்டது. பாண்டவர்களின் 12 வருஷம் வனவாசம் 1 வருஷம் அக்ஞாதவாசம் காலத்தை துரியோதனன் தவறாகக் கணக்கிட்டான். அதாவது அதிக மாசத்தை அவன் கணக்கில் சேர்த்துக்கொள்ளவில்லை. பீஷ்மர் முதலானோர் இப்பிழையை எடுத்துக்காட்டியும் அவன் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. பாண்டவர்களின் வனவாச காலத்தை அவன் நீட்டிக்கவே விரும்பினான். ஆனால் பாண்டவர்களின் ஆணித்தரமான வாதங்களையும் அழுத்தமான சாத்திர விதிகளையும் கண்டு, முடிவில் அவன் பீஷ்மர் முன்பு கூறிய அறிவுரைகளை அமைதியுடன் ஏற்றுக்கொள்ள வேண்டி வந்தது.

**ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.**

மாய் பிராட்டி வாசம் செய்கிறதில்லை.

முதலில் தலையில் எண்ணெய் தேய்த்துப் பிறகு மற்ற அவயவங்களில் தேய்க்கிறவனும், எண்ணெய்த் தலையுடன் நமஸ்காரம் செய்கிறவனும், புஷ்பம், பழங்கள் முதலியவைகளை எண்ணெய்த் தலையுடன் கொண்டு வருபவனும், எண்ணெய்த் தலையுடன் மல, மூத்திர விஸர்ஜனம் செய்பவனும், உடம்பிலும், காலிலும் மிகுந்த அழுக்குள்ளவனிடத்திலும், இவர்களிடம் லக்ஷ்மீ வாசம் செய்கிறதில்லை. தன்னாலோ, பிறராலோ கொடுக்கப்பட்ட, பிராம்மணனுடைய அல்லது சுவாமியினுடைய சொத்தை எவன் தெரிந்தே அபகரிக்கிறானோ அவன் இல்லத்தில் லக்ஷ்மீ போகிறதில்லை.

அறிவில்லாத மூர்க்கன், தக்ஷிணையில்லாமல் கர்மத்தைச் செய்து கொள்கிறவன், பலருக்குச் சேர வேண்டிய தக்ஷிணைகளை ஒருவனே எடுத்துக் கொள்கிறவன், அதை என்ன செய்தானென்று கவனியாமலிருக்கிற எஜமானன், முதலிய இவர்களை புண்ணிய ஹீனனெனமதித்து, இவர்களிருக்கிற இடத்திற்கும் பிராட்டி வருகிறதில்லை. துர் தேவதைகளை உபாஸிப்பவன், விவாஹம் முதலான நல்ல காரியங்களை கோபத்தினால் தடை செய்கிறவன் இவர்கள் இல்லத்திற்கும் பிராட்டி வசிக்கிறதில்லை."

"எந்த இடத்தில் பகவதாராதனமும், மங்களகரமான ஹரி கீர்த்தனையும், ஸ்ரீ க்ருஷ்ண ஸ்மரணையும், பாகவதர்களுடைய மகிமையைப் பற்றி பாடிப் பேசிப் புகழ்கிறார்களோ, அந்த இடத்தில் சகல மங்களங்களைத் தரக்கூடிய ஸ்ரீக்ருஷ்ண பகவானுக்குப் பிரியமான ஸ்ரீ மஹாலக்ஷ்மீ எப்பொழுதும் இடைவிடாமல் வசித்து வருகிறாள். மேலும் சங்கநாதம், வலம்புரிசங்கு, சாளக்கிராம ஆராதனம், திருத்துழாய், தியானம், அடியார்களை ஆராதித்தல், மங்களகரமான ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாம பாராயணம், முதலியவைகள் உள்ள இடத்தில் ஸ்ரீ பெரிய பிராட்டியாருடன்கூட ஸ்ரீ பெரிய பெருமாள் சதாகாலமும் வசித்து வருகிறார்.

நல்ல புண்ணியவான்களையும், நீதி உள்ளவர்களையும், ஒழுக்கம், ஆசாரம், தெய்வபக்தி, குருபக்தி முதலிய நன்னடத்தையுள்ளவர்களை சாக்ஷாத் ஸ்ரீ மஹா லக்ஷ்மீயானவள், தன் குழந்தையைப் போல் காப்பாற்றுகிறாள்".

புழு, பூச்சி, மரம், பிராணி முதலான பிறவிகளினின்றும் மனித ஜன்மம் கிடைப்பது அரிது. புண்ணிய பூமியாகிய இப்பரத கண்டத்தில் உற்பவித்த சேதநர்கள் அறிய வேண்டுவது யாதெனின், இந்த மனித ஜன்மத்திலுதித்தவர்களுக்குத்தான், 'பகுத்தறிவு' என்னும் அறிவை பகவான் அளித்துள்ளான். அதனால் நன்மை, தீமை என்பனவற்றை ஆராய்ந்து தீமையினின்றும் விலகி நன்மையைக் கடைப்பிடித்து, கிடைப்பதற்கரிதாகிய இந்த நல்ல ஜன்மம் கிடைத்திருப்பதை வீணாக்கிக் கொள்ளாமல், பூர்வாசார்யர்கள் அனுஷ்டித்துக் காட்டிய வழியைப் பின்பற்றி அவ்வழி நின்று, சத்காரியங்களைச் செய்து, 'அலர்மேல் மங்கையுறை மார்பனை திருவேங்கடவனின்' இன்னருளுக்கு என்றுமிலக்காகி சதிராக வாழ்ந்திட வேணும்.

நித்ய ஸ்ரீர் நித்ய மங்களம்.



# ஹரிஹரபுத்ரன் மணிகண்டன்




வியாச முனிவரின் மாணவரும், தலைசிறந்த பௌராணிகருமான சூத முனிவர் நைமீசாரண்யத்தில் சௌனகாதி முனிவர்களின் தலைமையில் ரிஷிகளையெல்லாம் கூட்டி அவர்களுக்கு மேன்மை தரும் பதினெட்டு புராணங்களையும் எடுத்துரைத்தார். அந்த பதினெட்டுப் புராணங்களில் ஒன்றான பிரும்மாண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ள பூதநாதோபாக்யானம் என்னும் கலியுகவரதனின் திவ்ய சரிதம், ஹரிக்கும் ஹரனுக்கும் அவதரித்த புத்திரன்—தர்ம சாஸ்தா மணிகண்டன் ஐயப்பனின் லீலைகளை நன்கு விளக்குகிறது. மற்றும் ஸ்காந்தம் என்ற புராணத்தைக் கொண்டு கஞ்சி கச்சியப்பசிவாசாரியார் தாம் எழுதிய கந்த புராணத்திலும் இந்த அய்யனார் என்ற சாஸ்தாவைப் பற்றி விரிவாய் எழுதியுள்ளார்.

### மஹிஷி விருத்தாந்தம்

ஒரு சமயம் பூமண்டலத்தில், பக்தி மார்க்கங்கள் மங்கி அறநெறிகள் நிலைகுலைந்தன. தர்மமும், சத்தியமும் நிலைக்க வேண்டும் என்பதற்காக மும்மூர்த்திகளும் தங்கள் அம்சங்களைத் திரட்டி "தத்தன்" என்ற தேவமகனைப் பூலோகத்திற்கு அனுப்பினர். இதை அறிந்த திருமகளும், மலைமகளும், கலைமகளும் தம் அம்சங்களைத் திரட்டி, காலவன் என்ற முனிவருக்கு மகளாக அருளினர். அந்த தேவமகள் "லீலா" என்ற பெயர் பெற்றாள். இறைவனின் அருளால் தத்தனுக்கும், லீலாவதிக்கும் திருமணம் நடந்தது. இவர்கள் இல்லறத்தில் இருந்து, சிற்றின்பத்தில் மூழ்கி வாழ்ந்து வந்தனர்.

சில நாட்களில் இல்லற சுகத்தில் நாட்டம் குறைந்து இறையின் தத்துவ விசாரம் செய்து மனத்தை மோன நிலையில் இருத்தி தவத்தில் மூழ்கி சித்தி பல பெற்று உலக நலனுக்கு பாடுபடப்போவதாக லீலாவதியிடம் அனுமதி கோரினான். ஆனால் சிற்றின்ப வேட்கை முற்றிலும் தீராத லீலாவதி அவனைத் தடுத்தாள். "நாதா! நான் உங்களது மஹிஷி அல்லவா? (மனைவி அல்லவா?). உத்தம குலப்பெண்கள் இக்கோரிக்கையை கணவனிடமல்லாது மாற்றாரிடம் கோர முடியுமா? உங்களது இல்லற தர்மத்தை மறுத்து வேறெந்த தருமத்தை ஆசரித்தாலும் அது முழுப் பயனும் தருமா? ஆகையால் எனது இக்கோரிக்கையை தாங்கள் நிறைவேற்றிய பிறகே உங்களை நான் போக அனுமதிப்பேன். உங்களைத் தடுக்கும் உரிமை எனக்கே உள்ளது. ஏனென்றால் நான் உங்களது மனைவி" என பலவாறாக வாதிட்டு தத்தனை வழிமறித்து தனது இச்சைக்கு இசைய வைக்க முயன்றதைக் கண்டு சினம் கொண்ட தத்தன், "மஹிஷி! மஹிஷி என ஓலமிட்டு சிற்றின்பத்திலேயே உழல விரும்பும் நீ விலங்குகளைப் போல ஒரு மஹிஷி (எருமை) முகத்தோடு ராக்ஷஸ இனத்தில் பிறப்பாயாக!" என சபித்தான். கற்பில் சிறந்த லீலாவதி "மஹிஷியாய் நான் பிறந்திருக்கையில் தாங்களும் ஓர் ஆண் எருமையாகப் பிறந்து எனது இச்சையைப் பூர்த்தி செய்வீராக" என மறு சாபம் இட்டாள். இன்பம் நுகர்ந்தபின் சாப விமோசனம் உண்டாக வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டாள். "அப்படியே!" என்ற தத்தமுனி, தவம் செய்து, உலகிற்கு பல நன்மைகள் செய்து தனது உற்பஸ்தானத்தை அடைந்தார்.

தத்தன் கொடுத்த சாபம் பலிக்கத் தொடங்கியது. தனு என்ற அரக்கனுக்கு ரம்பன் கரம்பன் என்ற இரு புத்திரர்கள் இருந்தார்கள். அவர்கள் ஆண் சந்ததி ஏற்படும் பொருட்டு கடுந்தவம் செய்தார்கள். ரம்பன் பஞ்சாக்நீ மத்தியிலும், கரம்பன் நீர் நடுவிலும் இருந்து பரமேஸ்வரனை நினைத்து தவம் செய்தார்கள். இதை அறிந்த இந்திரன் முதலை ரூபமெடுத்து நீரில் நின்று தவம்புரியும் கரம்பனைக் கொன்றான். தனது சகோதரன் மாண்டதை அறிந்த ரம்பன் மனம் வருந்தித் தானும் தீயிற் பாய்ந்து உயிர்விட முடிவு செய்தான். அப்பொழுது அக்னி தேவதை அவன் முன் தோன்றி அவனுக்குத் தக்க வரம் தந்தருளினான்.

திரு. எஸ். சந்திரமௌலி—திருப்பதி.

## அறிவிப்பு

திருமலைக்கோயில் கர்ப்பகிருஹத்தில் பாம்பு ஒன்று தோன்றிய தாயும், பின்பு அது ஒரு பூசாரியாக உருவெடுத்ததாகவும், அவர் பிறரை எச்சரித்ததாகவும் கூறி, இவ்விஷயத்தை துண்டுப் பிரசுரங்கள் மூலம் மற்றவர்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும் என்றும், இல்லையெனின் தீங்குக்குள்ளாவார்கள் என்றும் கூறிப் பலர் பொதுமக்களிடையே பீதியை உருவாக்கி வருகிறார்கள். மேற்குறிப்பிட்ட செய்தி தவறு என்பதையும், இது போன்ற துண்டுப் பிரசுரங்களுக்கு எந்தவித மதிப்பும் தர வேண்டாம் என்பதையும் இவ் அறிவிப்பின் மூலம் பொதுமக்கள் உணர்த்தப்படுகின்றார்கள்.

— ஆசிரியர்

வரம் பெற்ற மகிழ்ச்சியில், வரம் பற்ற செயலில் இறங்கிய அரக்கன் ஒரு மஹிஷம் (எருமை) மீது மோஹம் கொண்டு அதனுடன் பாதாளலோகத்தில் வஸிக்கலானான். கர்பம்கொண்ட எருமையை வேறொரு ஆண் எருமை நெருங்கவும் கோபம் கொண்ட ரம்பன் அந்த ஆண் எருமையைத் தாக்கினான். அது ரம்பனைக் கொன்றது. மனம் நொந்த பெண் எருமை ரம்பனைக் கொளுத்திய சிதையில் விழுந்து உயிரை விட்டது.

அக்னி தேவனின் வரம் பெற்ற ரம்பனின் கருவைக் கொண்டிருந்த மஹிஷம் நெருப்பில் குதிக்கும் சமயம் ஆண் மகவை ஈன்று மடிந்தது. நெருப்பு அந்த குழந்தையை தீண்டவில்லை. அக்குழந்தையும் எருமை முகத்துடன் இருந்தது. அக்குழந்தைக்கு அரக்கர்கள் மஹிஷாசுரன் என்று பெயரிட்டனர். அவன் அரக்கர்களுக்கு அரசனாக விளங்கினான். பின்னர் மாதவம் புரிந்து தன்னை ஆண்கள் எவரும் கொல்லலாகாது என்ற வரமும் பெற்றான். பெண்களாலும் தனக்கு இறப்பு வரலாம் என்பதை அவன் மறந்து விட்டான். அமரர்களை அடக்கி ஆளத் துவங்கினான். மஹிஷாஸுரனைக் கொல்ல மும்மூர்த்திகள் தங்கள் அம்சங்களை ஒன்று சேர்த்து ஒரு அழகான பெண் உருவம் அமைத்தனர்.

பதினெட்டு கைகளும், மூன்று கண்களும், மற்ற பிற தேவர்களின் சிறப்பான அம்சங்களும் கொண்டு விளங்கிய தேவியை "சண்டிகா தேவி" என்ற பெயரிட்டு மும்மூர்த்திகள் தம்மிடமுள்ள பல ஆயுதங்களையும் கொடுத்து உதவினர். சிங்கத்தின் மீதேறிய தேவிக்கும் எருமை முகம் கொண்ட அரக்கர்களுக்கும் இடையே கோரமான யுத்தம் நடந்தது. அரக்கன் எளிதில் மடியாததைக் கண்ட தேவி, தன் சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனைக் கொன்றாள். அரக்கன் பூமியில் இறந்து விழ, தேவர்கள் பூமாரி பொழிந்து தேவியைத் துதித்துக் கொண்டாடினார்கள். பக்தர்களுக்கு அருள் பாலித்துவிட்டுத் தேவியும் அந்தர்த்யானமானாள்.

உலகனைத்தையும் காக்கும் ஜகன் மாதா மஹிஷாசுரனை அழித்தது கண்டு அவனது சகோதரியான மஹிஷமுகத்தோடு (எருமை) பிறந்த கரம்பன் புத்ரி "கரம்பிகை" மிகவும் துன்பம் கொண்டாள். இந்தக் கரம்பிகைதான் முன் ஜன்மத்தில் லீலாவதியாக இருந்து தத்தன் கொடுத்த சாபத்தால் இப்பொழுது மஹிஷமுகத்தோடு கரம்பனின் புத்ரியாக பிறந்திருக்கிறாள்.

தனது சோதரனைக் கொன்ற தேவர்களை வஞ்சம் தீர்க்கக் கங்க

ஒன்று திரட்ட ஆயத்தமானாள். நமது புராணங்களில் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் அடிக்கடி சண்டை வருகிறது. ஒருவருக்கு மற்றவரை ஒழிப்பதே வேலையாக இருந்தது. விஷ்ணுவின் அருளால் தேவர்கள் அமரராகவே இருந்தனர். தோல்வியுற்றாலும் அவர்கள் இறப்பதில்லை. ஆனால் அசுரர்கள் வெற்றி பெறுவும் இறப்பார்கள். தேவர்களைக் கஷ்டப்படுத்துவதும், பழி வாங்குவதும் அரக்கர்களின் இயற்கை குணம். ஆகவே மஹிஷியும் அரக்கர்களை ஒன்று திரட்டி தேவர்களை அழிக்க நினைத்ததில் வியப்பொன்றும் இல்லை. ஆனால் பிரளய கால ஊர்த்வதாண்டாக்னி போல் பதினெட்டு கைகளுடன் சிங்கத்தின் மீதேறி மஹிஷாசுரனை கொன்ற தேவியை எதிர்க்க துணிவற்ற அரக்கரனைவரும் மஹிஷிக்கு உதவி தம்முடைய உயிரையும் மாய்த்துக்கொள்ள மனமின்றி பின் வாங்கினார்கள். முடிவில் குலகுரு சுக்ராச்சாரியாரின் யோசனைப்படி மஹிஷி நான்முகனைக் குறித்து கடுந் தவம் புரிந்தாள். தவத்திற்கு மகிழ்ந்த நான்முகன் இவள்முன் தோன்றி "இறவாமை தவிர வேறு வரங்கள் எது வேண்டுமாலும் கேள் தருகிறேன்" என்றார். அரக்கி அவரைப் பணிந்து தான் தீ, காற்று, நீர் கல், ஆயுதம், தாவரம் முதலியவை மூலமும், நோயாலும் இறக்கக் கூடாது என்றும், தனது ரத்தத்துளி பூமியில் விழுந்தால் அதனின்று தன்னைப் போல பலமுள்ள நூறு மஹிஷிகள் உதிக்க வேண்டும் என்றும், தான் விரும்பியபோது தன் உரோம கணங்களிலிருந்து தனக்கு வேண்டிய அளவு மஹிஷி சைன்யம் உற்பத்தியா வேண்டுமென்றும், ஒருவேளை தனக்கு அழிவு நேர்வதென்றால் அது ஹரியாகிய நாராயணனுக்கும், ஹரனாகிய சிவபெருமானுக்கும் பிறந்த ஆண் மகன் பன்னிரண்டு ஆண்டுகள் ந

## மதிப்புரை

நூல் பெயர்: சபரிமலை செல்வோம் தொகுப்பு: நடாதூர் நம்பி; தயாரிப்பு: அணில்புவிவேந்தன்; விலை: ரூ.1-50; கிடைக்குமிடம்: அணில் ஆப் செட் புக்ஹவுஸ், 40, A காந்திரோடு, பாண்டிச்சேரி-605001.

புனிதமான சபரிமலை யாத்திரை ஆண்டுதோறும் ஆயிரமாயிரமான பக்தர்களால் மேற்கொள்ளப்பட்டு வளர்ந்து வருகிறது; இந்தப் பக்தர்களுக்கு ஒரு ஊன்றுகோலாய் சபரிமலை பயணவிதிகளையும், சபரிமலையில் தர்ம சாஸ்த்தா என்ற பெயரில் தங்கியிருக்கும் ஐயப்பன்தான் அரி-அர-சுதனாய் தோன்றிய வரலாற்றையும், சபரிமலை யாத்திரை செய்வதால் உண்டாகும் பயனையும் தெளிவாக விளக்கும் முறையில் இந்நூல் அமைந்துள்ளது.

ஐயப்ப கோலங்கொண்டோர் ஒருவருக்கொருவர் உயர்வு தாழ்வு கருதாமல் இருக்கும் விதியைச் சொல்லி, மனித சமுதாயம் எப்பொழுதும் அவ்வாறே உயர்வு தாழ்வு இன்றி 'எல்லோரும் சமம்' என்ற மனப்பக்குவத்தைப் பெற்றிருக்க வேண்டும் என்ற கருத்தையும் இந்த ஆசிரியர் இந்த நூலில் தெளிவுப்படுத்துகிறார்.

சுவாமி ஐயப்பன், தன்னைத் தரிசிக்க வரும் பக்தர்களுக்குத் தரிசனம் தர வேண்டி தான் தோன்றிய பம்பாநதி தீரத்தில் சபரிமலையில் வீற்றிருக்கும் செய்தியினையும் சொல்லி, சுவாமி ஐயப்பன் பிறந்தது மகரசங்கராந்தியாகையால் அந்நாளிலேயே மக்கள் அந்த சாமியைத் தரிசிக்கின்றனர் என்ற விவரத்தையும் இந்த நூல் சொல்லுகிறது.

இந்த நூலில் உள்ள செய்திகள் எளிய மொழியில் சொல்லப்பட்டுள்ளன. விலையும் மிகவும் குறைவு. ஆகையால் ஒவ்வொருவரும் ஒரு பிரதியை தமக்காக வைத்துக்கொள்ளும் தகுதி இந்நூலுக்கு உண்டு.

**டாக்டர் என். தர்மாரெட்டி — திருப்பதி.**

னுக்கு சேவை செய்து மனித வாழ்வு வாழ்ந்தவனால்தான் உண்டாக வேண்டும். அவன்தான் என்னை அழிக்க சக்தியுள்ளவனாக இருக்க வேண்டும்'' என்றும் வரம் கேட்க, பிரம்மாவும் "நீ தேவலோகம் முழுவதையும் அரசாளத் தகுந்த தவப்பலன் உன்னிடம் உள்ளது. உன் கோரிக்கைபடியே ஹரிக்கும் ஹரனுக்கும் பிறக்கும் பிள்ளை பூவுலகில் பன்னிரண்டு ஆண்டுகள் மனித வாழ்வு வாழ்ந்தவனைத் தவிர வேறெந்த சக்தியாலும் உன்னை அழிக்க முடியாது'' என்று வரம் கொடுத்து மறைந்தார்.

அரக்கர்கள் எப்பொழுதும் முடியாத ஒன்றைத்தான் வரமாகக் கேட்பார்கள். ஆனால் தெய்வம் என்றைக்கும் அதையும் வென்று நிறைவேற்றிவிடும். ஹரிஹரன் இருவரும் ஆண்வர்கத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு ஒரு மகவு தோன்றுவதாவது? அப்படியே தோன்றினாலும் அச்சிசு பன்னிரெண்டு ஆண்டுகள் மனிதனாக வாழும் காலத்தில் அதனை அழித்து விடுவதென்பது மஹிஷியின் எண்ணம்.

ஆனால் தெய்வத்தினால் முடியாத காரியம் உண்டோ?

இப்படி பல வரங்களைப் பெற்ற மஹிஷி தன் உடலினின்றும் எண்ணற்ற (அரக்கர்) மஹிஷ சைன்யத்தைத் தோற்றுவித்து, அவர்களோடு இந்திரலோகம் சென்று, இந்திரனை வென்று, இந்திர சிம்மாதனத்தைக் கைப்பற்றி ஆண்டு வருவதோடல்லாமல், தேவர்களுக்குக் கடுமையான தண்டனைகள் விதித்து இம்சை செய்து தன் தமையனை வதைத்தவர்களுக்கு இத்தண்டனை மிகக்குறைவானதே என்று நியாயம் பேசி வந்தாள். ஒரு பாவமும் அறியாத தேவர்கள், மும்மூர்த்திகளை எண்ணி தியானித்தனர். தாணு, மால், அயன் மூவரும் அவர்கள் முன் தோன்றி கலங்க வேண்டாமென்று அபயமளித்து, 'இந்திரனிடம் இவள் தவம் புரிந்து இப்பதவியைப் பெற்று போகம் அனுபவிப்பதற்கென்றே வந்துள்ளவள். இவளைத் தற்சமயம் அழிக்க வியலாது. இவளது பாவங்கள் முற்றும் வரை இவளை ஒன்றும் செய்ய முடியாதாகையால் தற்சமயம் இங்கிருந்து அப்புறப் படுத்துவோம்' எனக்கூறி மூவரும், (பிரும்மா, விஷ்ணு, சிவன்) ஆரத் தழுவிக் கொண்டனர். உடனே பிரம்மா அதை ஒரு ஆண் எருமையாகச் செய்து அதற்கு சுந்தர மஹிஷம் என்று நாமகரணம் செய்தார். விஷ்ணு அதன் கழுத்தில் ஒரு திவ்ய மணியைக் கட்டினார். இவன் 'முற்பிறப்பில் தத்தனாக இருந்து லீலாவதிக்குச் சாபம் கொடுக்க அவள் இப்பொழுது மஹிஷி (பெண் எருமை)யாகவும், இவன் சுந்தர மஹிஷமாகவும் பிறந்துள்ளனர்' என்று கூறி பரமசிவன் இந்த சுந்தர மஹிஷத்திடம் அரக்கியாகிய மஹிஷிமுகியின் மோஹ வலையில் சிக்கிப் பூலோகத்திற்குச் சென்று வாழும்படிச் சொன்னார். இதைக் கேட்ட தேவர்கள் மகிழ்ந்தனர்.

அமராவதி நகரில் கோலாகலமாகக் கொலுவிருந்த மஹிஷிமுகியின் காதுகளில் சுந்தர மஹிஷத்தின் கழுத்திலிருந்த மணியோசை விழுந்து ஏதோ இனம் புரியாத மோஹ உணர்வை ஏற்படுத்தியது. அழகிற் சிறந்த ஆண் எருமையைக் கண்டதும் அரசாங்க விஷயத்தை அறவே மறந்து, கூடி மகிழ அதிக ஆசை கொண்டாள். சுந்தர மஹிஷமும் தேவ கட்டளையை நினைவிற் கொண்டு பூலோகத்தில் மஹிஷி முகியுடன் இன்புற்று வாழலானான். (அப்படி அவர்கள் சுகித்த காலத்தில்

(47ம் பக்கம் பார்க்க)

"அவர் என்னுடன் கலவி செய்ய வருவாரென்று நம்பி முலைத் தடங்களில் குங்குமக் குழம்பு பூசி அணி செய்து வைத்துள்ளேன்; அதனைப் பயனுடையதாம்படிச் செய்வாராகில் தரிக்கலாம் என்று சொல்லுங்கள்" என்கின்றாள். 'என் ஆவி தங்கும்' என்ற சொல் நயம் நோக்கத் தக்கது. "ஒரு நாள் அணைந்த அளவால் போகத்துக்குப் போராது; அஃது உயிர் தரிப்பதற்கே சாலும்" என்ற குறிப்பு அறிந்து மகிழத் தக்கது.

இவளுடைய பாரிப்புக் கெல்லாம் ஒரு நாள் அணைந்தால் போருமோ? ஊழியெல்லாம் அணைத்துக்கிடந்தாலும் திருப்தி பெற மாட்டாத அபிநிவேசமன்றோ(பற்று) இவளது? அப்படிப்பட்ட அபிநிவேசம் ஒரு நாள் தங்கின அளவாலே திருப்தி பெறுமோ? 'ஒரு நாள் தங்குமேல் என் ஆவி தங்கும்': "குணஜ்ஞானத்தாலே தரியாளோ என்றிருக்க வொண்ணுது; அணையுமாகில் தரிக்கலாம்" என்பது ஆச்சான் பிள்ளையின் வியாக்கியான வாக்கியம்.

**உள்ளத்தைத் தொடும் செய்தி :**

இறுதியாகத் தன் நிலைமையை மீண்டும் ஒரு முறை புலப்படுத்திக் கூறும் செய்தி நம் உள்ளத்தையும் நெகிழ வைக்கின்றது. "கார் காலத்தில் தவறுமல் வந்து சேர்கின்றேன்' என்று சொல்லிப் போன பெருமான் வாராதொழிந்தாலும் நாம் திருநாம சங்கீர்த்தனம் பண்ணிக் கொண்டாவது ஒருவாறு தரித்திருப்போம் என்று கருதி, அடியார்கட்காகக் காரியம் செய்வதையே கடமையாகக் கொண்டு விரோதிகளைப் போக்குவதில் உற்சாகம் கொண்டு கிளருமவனை சக்கரவர்த்தித் திருமகனுடைய திருநாமங்களைச் சங்கீர்த்தனம் பண்ணத் தொடங்கினேன்; அதுவே காரணமாக உடனே தளர்ச்சியடைந்தேன்; மழைக் காலத்தில் எருக்கம் ஒசிந்து தளர்ந்து தளர்ந்து விழும்படியான நிலைமையை அடைந்தேன்; இந்நிலையிலும் அப்பெருமான் எனக்கு அருள் செய்ய நினைந்திலன்; என் வாழ்நாளெல்லாம் இப்படித் துக்கமயமாகவேயோகழியப் போகின்றது? ஒரு நாளாகிலும் ஒருவாய்ச் சொல் அருளமாட்டாரோ?" (நா. திரு. 8:8) என்று தான் ஏங்கி நிற்கும் நிலையைப் புலப்படுத்துகின்றாள்.

இதன் பின்னர் அவள் பேசும் பேச்சுதான் நம் உள்ளத்தில் ஆழப் பதிகின்றது. இஃது எம்பெருமான் திருவுள்ளத்தைக்கட்டாயம் தொடத்தான் செய்யும். அன்னையார் மேகத்தை விளித்துப் பேசுகின்றார்.

மதயானை போல்எழுந்த
 மாமுகில்காள்! வேங்கடத்தைப்
பதியாக வாழ்வீர்காள்!
 பாம்பணையான் வார்த்தை
 யென்னே!
கதியென்றும் தானுவான்
 கருதாதோர் பெண்கொடியை
வதைசெய்தான் என்னும்சொல்
 வையகத்தார் மதியாரே.

(நா. திரு. 8:9)

(பதி-இருப்பிடம்; தான்-எம்பெருமான்; வதை-கொலை; மதியார்-மதிக்க மாட்டார்கள்).

பாசுரத்தின் பொருள் வெளிப்படை. எனினும் சொற்றொடர்கள் குறிக்கும் தொனிப் பொருள் நம் இதயத்தில் ஒலிக்கின்றது. குக்கிராமமே குடியிருப்பானவர்கள் வந்தேறிகளாய்த் திருநாள் சேவித்து விட்டுப் போவதுபோலன்றியே எம்பெருமான் திவ்விய தேசத்திலேயே நிரந்தரமான வாழ்வு பெற்றிருப்பதால் செருக்கியிருக்கும் நிலைகண்டு 'மதயானைபோல் எழுந்தமாமுகில்காள்!' என விளிக்கின்றாள். இதற்கு முன்னுள்ள பாசுரத்தில் கார் காலத்தில் வருவதாகச் சொல்லிப் போன எம்பெருமான் குறிப்பைப் புலப்படுத்தும் வகையில் 'கார் காலத்தெழுகின்ற கார்முகில்காள்!' என்று விளித்தவளன்றோ? என்னே!' என்பதில் திருவனந்தாழ்வானிடம்,

"சென்றால் குடையாம்;
 இருந்தால்சிங் காசனமாம்;
நின்றால் மரவடியாம்;
 நீள்கடலுள்—என்றும்
புணையாம்; மணிவிளக்காம்;
 பூம்பட்டாம்; புல்கும்
அணையாம்.

(முதல். திருவந். 53)

(சென்றால் - உலாவினால்; இருந்தால்-உட்கார்ந்தால்; மரவடி-பாதுகை; புணை - மெத்தை (தெப்பம்); விளக்கு-தீபம்; பூம்பட்டு-திரிப்பரிவட்டம்; புல்கும்-தழுவும்; அணை-தலையணை).

என்று பொய்கையாழ்வார் அருளிச் செய்தபடி ஆதிசேடனிடம் எம்பெருமான் எல்லாவித கைங்கரியங்களையும் கொள்வதுபோல், என்னிடத்தும் கொள்வன் என்றிருந்தேன்; பாம்பணையைக் கைவிட்டுத் திருமதுரையில் வந்து பிறந்த கண்ணபிரான் தேர்த்தட்டில் நின்று சொன்ன வார்த்தையை (சரமசுலோகத்தை) (பகவத் கீதை 18:66) மெய்யென்று நம்பி மோசம் போனேன். பாம்போடே அணைந்து பாம்பின் தன்மையையே தனக்கும் உண்டாகப் பெற்றான். அதற்கு நாக்கு இரண்டாக இருப்பதுபோல் இவனும் இரண்டு நாக்குப் பெற்றான்". 'பொய்யனாகி விட்டான்' என்ற கருத்து தொனிப்பதைக் கண்டு மகிழ்கின்றோம். தன்னுடைய காக்கும் தொழிலை மறந்ததோடன்றி 'ஒரு பெண் பிள்ளையைக் கொலை செய்தான்' என்ற கருத்து உலகில் பரவுமாகில் பின்னர் அவனை மதிப்பார் உண்டோ? என்று அவன் மீது கழிபேரிரக்கமும் கொள்கின்றாள். இங்ஙனம் அன்னை ஆண்டாள் வேங்கடவாணன் மீது தூது விடுவதாக அமைந்த திருமொழியில் ஆழங்கால் பட்டு அன்னையாரின் அநுபவத்தையே பெற முயல்கின்றோம். ★

# பத்மசாலியர் - ஒரு பார்வை

பத்மசாலியர் என்னும் சிறுபான்மை ஆந்திரப் பழங்குடிகள் தமிழகத்தில் ஆங்காங்கே குடியேறி வாழ்ந்து வருகின்றனர். இவர்களுடைய தாய்மொழி தெலுங்கு: தொழில் நெசவு. இவர்கள் அனைவரும் மார்க்கண்டேய கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள்.

மார்க்கண்டேய முனிவர் செய்த வேள்வித் தீயில் தோன்றிய பாவனரிஷிக்கும், சூரியன் மகளான பத்ராவதிக்கும் பிறந்த 101 புதல்வர்களின் வழித்தோன்றல் என்று தம்மைக் கூறிக் கொள்கின்றனர். ஒரு சாரார் சைவ சமயத்தைச் சேர்ந்தவர்களாகவும், மற்றொரு சாரார் வைணவ சமயத்தைச் சேர்ந்தவர்களாகவும் உள்ளனர். குடும்ப தெய்வங்கள் பல் வேறுபட்டிருப்பினும் அனைவரும் வணங்குவது 'பாவனரிஷி' யையே. தமிழகத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக பாவனரிஷிக்குக் கோயில்கள் உள்ளன.

பாவனரிஷிக்குப் புலிவாகனம் சம்பிரதாயமாக இருப்பதால், பத்மசாலியர்கள் புலிக்கொடியை அடையாளமாகக் கொண்டுள்ளனர்.

பாவனரிஷி தாமரையின் நூலில் இருந்து தமது மனவலிமையினால் ஆடைகளை நெய்து, அவற்றைத் தேவர்களுக்கு வழங்கி வந்ததாகவும் புராணம் கூறுகின்றது. தாம் நெய்த ஆடையின் முதல் பகுதியைத் தராமல் கடைசிப் பகுதியைபைரவருக்குக் கொடுத்ததற்காக, அவர் மிகவும் மனம் வருந்தி பாவனரிஷிக்குச்சாபமிட்டாராம். 'பாவனரிஷி' தயாரிக்கும் ஆடைகள் ஆறு மாதங்களில் கிழிந்து விடும் என்பது பைரவர் இட்ட சாபம்.

1907 ஆம் ஆண்டு சென்னை அரசாங்க அச்சகம் வெளியிட்ட பாரா மஹால் பதிவேடுகளின் (*Bara mahal Records*) மூன்றாம் தொகுதியில் பத்மசாலியர் பற்றிக் கூறப்பட்டுள்ள செய்தியாவன:-

"தொடக்க காலங்களில், ஒரு குறிப்பிட்ட நெசவாளர்கள் 'மார்க்கண்டேயலு' என்னும் முனிவருக்கு வருடத்துக்கு ஒரு தடவை ஆடை வழங்கி வந்தனர். மார்க்கண்டேயர் 'ம்ருகண்டி மகரிஷி' யின் புதல்வர். இக்கடமையில் இருந்து அந்த நெசவாளர் தவறிய காரணத்தால், மார்க்கண்டேய முனிவர், தவவலிமையால் வேள்வித் தீ வளர்க்க, அதிலிருந்து ஒரு மனிதன் தோன்றினன். அவன் 'பத்மசாலிவாடு' என்று அழைக்கப்பட்டார். தமக்கு ஆடை நெய்து வழங்குமாறு அவனுக்கு ஆணையிட்டார் மார்க்கண்டேயர்.

வேள்விக் குண்டத்தில் தோன்றிய 'பத்மசாலிவாடு' ஒரு நாள் மார்க்கண்டேயரை அணுகி, "சுவாமி! தங்கள் அடிமையாகிய நான் யாரை வணங்குவது? மோட்சம் அல்லது மூலப்பொருள் அடையும் வழிதான் யாது?" என்று கேட்க, முனிவர் தம்மைப் பூஜித்து மோட்சம் பெறுவாயாக என்று கூறினர்.

சேலம் அன்பரசு

பாவனரிஷி - பத்ராவதி இவர்களுக்குப் பிறந்த 101 பேர்களில் 100 பேர்களின் வழித் தோன்றல்கள் பத்மசாலியர் என்றும், எஞ்சிய ஒருவரின் வழித்தோன்றல்கள் 'பட்டு சாலியர்' என்றும் பெயர்களைப் பெற்றனர் என்று 'ஆந்திரபதா பாரி ஜாதமு' என்னும் பத்மசாலியர்களின் ஆதி புராணம் கூறுகிறது.

'சாலிகா' என்னும் சம்ஸ்கிருதச் சொல்லின் திரிபு 'சாலிய' என்று மைசூர் அரசாங்கம் பிரசுரித்த (*Ethnographical Survey of Mysore sala caste*) என்னும் அறிக்கை கூறுகிறது. இந்த அறிக்கை, பாவனரிஷி சூரியன் மகள்களான பிரசன்னவதி, பத்ராவதி ஆகியவர்களை மணந்தார் என்றும் இவர்களின் சந்ததியார் 'பத்மசாக வமிசத்தினர்' என்றும் கூறுகிறது.

மேலும், விஜய நகர சாம்ராஜ்யத்தின் தலைநகரான ஹம்பியிலிருந்து, மைசூர் மன்னர் 'கெம்பே கௌடா' காலத்தில் மைசூர் மாநிலத்திற்கு பத்மசாலியர் வருகை புரிந்ததாக இவ்அறிக்கை கூறுகிறது.

"முதலாம் இராசஇராச சோழன் காலத்தில் கீழைச் சாளுக்கியர், சோழர் தொடர்பு ஏற்பட்டபோது பத்மசாலியர் ஆந்திர மாநிலத்திலிருந்து அழைத்து வரபட்டார்கள்." என்று திரு. ஸ்டுவர்ட் குறிப்பிடுகிறார் (சென்னை சென்ஸஸ் அறிக்கை 1891)

பெரிய புராணத்தில் சேக்கிழார் குறிப்பிடும் கம்பிலி நாட்டிலிருந்து சிவனடியார்களுக்கு ஆடைகள் வழங்கி வந்த நேசநாயனரைத் தமது இனத்தைச் சேர்ந்தவர் என்று பத்மசாலியர் கூறிக் கொள்கின்றனர்.

பழம் பெருமை பெற்ற இச்சமூகத்தினரைப் பற்றிய செப்பேடு ஒன்று சமீபத்தில் சேலம், அரசிப்பாளையம் வீட்டாரிடமிருந்து ஆய்வுக்குக் கிடைத்தது. இச்செப்பேடு 33×18 சென்டிமீட்டர் அளவுள்ளது. இரு பக்கங்களிலும் தெலுங்கு எழுத்துக்கள் பொறிக்கப்பட்டு இறுதியில் புலி சின்னத்துடன் முடிகிறது. இச்செப்பேட்டிலிருந்து அரிய பல வரலாற்றுச் செய்திகள் கிடைத்துள்ளன.

# ஸ்ரீ இராமகிருஷ்ண மடம்

சுவாமி விவேகானந்தா சாலை, மேலூர் (அஞ்சல்) கொயிலாண்டி,

காளிகட் மாவட்டம், கேரளா - 673319.

## உங்களுக்கோர் விண்ணப்பம்

கி. பி. 1498-ம் ஆண்டு வாஸ் கோடிகாமா காலடி வைத்த சரித்திர பெருமை பெற்ற கொயிலாண்டியில் 70 ஆண்டுகளுக்கு முன்பேயே அதாவது 1914இல் இராமகிருஷ்ண இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. இயக்கம் தோன்றிய நாள் முதற் கொண்டே, சுற்றுபுறம்உள்ள பல கிராமங்கள் உள்ளிட்டுக் கொயிலாண்டியில், ஸ்ரீ விவேகானந்தர் வழியில், பல ஆன்மீக, பண்பாட்டுத் தொண்டு மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. தற்போது விவேகானந்தா கல்வி மையம், இராமகிருஷ்ண—சாரதா—விவேகானந்தா—ஸ்ரீ ஐயப்பா பால கோகுலங்கள், சிறுர் நூலகம், அவ்வப்போது ஆன்மீகக் கூட்டத் தொடர்கள் மற்றும் மகான்களின் பிறந்த நாள் விழாக்கள் போன்றன சிறிய அளவில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. சுவாமி சிதம்பரானந்தா அவர்களால் சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் இலவசக் கல்வி வகுப்புகள், யோகாஸனங்கள், தியானம் போன்றனவும் கற்றுத் தரப்படுகின்றன.

காலப் போக்கில் மடத்தின் கட்டிடம் பழுதுபட்டுள்ளது. மேலும் குடியிருகக முடியாத அளவு, மழையினுலும், கரையானுலும் கட்டிடம் பழுதடைந்து, சில பகுதிகள் இடிந்து விழுந்துள்ளன. புதிய கட்டிட அமைப்பு தற்போது இன்றியமையாதது. புதிய திட்டத்தின்கீழ் கட்டப்படவிருக்கும் இப்புதிய கட்டிடம் வழிபாட்டு மற்றும் தியான அரங்கு, சிறிய சமையலறை, உணவு அருந்தும் அரங்கு, மகான்கள் தங்க குடியிருப்புகள், விருந்தினர் அறைகள் ஆகியன பெற்றிருக்கும். இப்புதிய கட்டிடம் கட்ட ரூ. 3.5 இலட்சமாகும். வழிபாட்டு மற்றும் தியான அரங்கு கட்டிட வேலையின் முதல் பகுதி பணி பாதி முடிந்துள்ளது. இது முழுவதும் கட்டப்பட்டு, அரங்கு முடிவதற்கு இன்னும் பல பணிகள் மேற்கொள்ள வேண்டும். இதற்கு ரூ. 60,000 தேவையாக உள்ளது. எதிர்பார்த்தபடி, இக்கட்டிடப்பணி முன்னேறவில்லை.

இந்த புனிதமிகு பணிக்கு, தங்களால் முடிந்த அளவு நிதி உதவி தந்தருளுமாறு நண்பர்களையும், நல்லோர்களையும் கேட்டுக் கொள்கின்றோம். இவ்வுதவியை எங்களது தனிப்பட்ட வேண்டுதலாக ஏற்க வேண்டுகிறோம்.

ரூ. 10,000-ம் மேற்பட்டு நிதி உதவி தருபவர்களின் பெயர்கள், தகுந்த இடத்தில் பொறிக்கப்படும். ரூ. 1000-ம் மேற்பட்டு பொருளுதவி தருபவர்களின் பெயர்களும், தகுந்த இடத்தில் வைக்கப்படும். பணமோ, பொருளோ அது எவ்வளவு சிறிதாயினும், அவை மிக்க நன்றியுடன் ஏற்றுக் கொள்ளப்படும்.

இது சம்பந்தமாக, பல புகழ் பெற்ற அறிஞர் பெருமக்களின் கட்டுரைகளைக் கொண்ட மலர் ஒன்றினை வெளியிட உள்ளோம். ஆதலால் இம் மலரில் விளம்பரங்களையும், பாராட்டு உரைகளையும் தாராளமாக தந்துதவும்படி பொது நிறுவனங்களையும், வியாபார பெருமக்களையும் கேட்டுக் கொள்கிறோம்.

தந்துதவும் தொகைக்கு 1961 வருமான வரிச் சட்டம் பிரிவு எண்.80 ஜி. VIDB-PAN 1101-RQ 2125/CAL & C. T. (C) என்பதன்கீழ் வருமான வரியிலிருந்து விலக்களிக்கப்படும்.

செக் மற்றும் டிராப்ட்டுகள் யாவும் 'இராமகிருஷ்ண மடம், கொயிலாண்டி' எனும் பெயரில் வாங்கப்படல் வேண்டும்.

இப்புனித பணிக்குத் தாராளமாக உதவி செய்து, ஸ்ரீ ராமகிருஷ்ண, புனித அன்னை மற்றும் சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் நல்லாசிகளை பெறுங்கள்.

கல்வி உதவிக்காக அறக்கொடைகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

மக்கள் சேவையே மகேசன் சேவை

சுவாமி சிதம்பரானந்தா.
தலைவர்.

---

## விண்ணப்பம்

ஸப்தகிரி இதழுக்கு கட்டுரை, கதைகள், அனுப்ப விரும்பும் எழுத்தாளர் பெருமக்கள், அவற்றைப் பிரசுரிக்க வேண்டிய மாதத்திற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பேயே அனுப்புதல் வேண்டும். பிரசுரிக்கப்படும் கதை, கட்டுரைகளுக்கும், புகைப்படங்களுக்கும், சித்திரங்களுக்கும் தகுந்த சன்மானம் வழங்கப்படும்.

ஆசிரியர்.

---

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

